THE

# WINTER'S TALE

**A TAMIL DRAMA**

**மச்சரன் என்னும் ... ...**

**... ... மாரிகாலக் காதை.**



BY

K. VENKATARAMA AIYAR, B. A.

*Late of the Town High School, Kumbakonam.*

Second Edition.

PUBLISHED BY

T. KRISHNASWAMY AIYAR,

*Hindu Educational Printing Co.,*

*Kumbakonam.*

# மச்சான்

என்னும்

# மாரிகாலக் காதை.



கும்பகோணம் டவுன் ஹைஸ்கூல் உபாத்தியாயரா யிருந்த

கே. வேங்கடராமய்யர், பி. ஏ., அவர்களால்

இயற்றப்பட்டு.

கும்பகோணம் ஸ்ரீ வித்யா எஜுகேஷனல் டிபாஸிடரி கம்பெனி

டி. கிருஷ்ணசாமி அய்யரவர்களால்

பிரசுரம் செய்யப்பட்டது.



[இரண்டாம் பதிப்பு.]



கும்பகோணம்

"ஸ்ரீ கிருஷ்ண விலாஸ பிரஸில்"

பதிப்பிக்கப்பட்டது.

1915.

 [விலை அணா 8.

# Preface to the Second Edition.



*I must express my thanks to the Head Masters of the Training Schools in the Presidency for their having selected the Winter's Tale as a Text Book and s condly to the Text Book Committee for their having recognized it as a suitable book for secondary schools. There would have been no need for issuing a Second Edition if the Department had not come in to my help. This Second Edition is a mere reprint of the first. The alterations are few and unimportant as they consist of corrections of typographical errors and a few verbal changes which, on second thoughts, seemed to me to be called for. Not one of the many dramatic companies has yet thought fit to put this play on the stage. I understand that the absence of songs in the place of dialogues is a hindrance to the play being enacted. I am sorry that my unmusical nature cannot meet the demands of the modern stage even half way. I am perfectly satisfied with the recognition of the book by the Training School authorities and by the Text Book Committee. It is enough if the book is used in the School Room and in the closet.*

KUMBAKONAM.
*14th August 1915.* } R. Venkatarama Aiyar.

# Preface to the First Edition.



Having had some encouragement from the adaptations of Lamb's Tales from Shakespeare issued by me and approved by the Madras Text Book Committee, I have in this new venture, adapted Shakespeare's 'Winter's Tale The character of Hermione is one of the noblest portrayed by Shakespeare, and Paulina, her faithful friend, does not appear to be seconded in history. The names given to the characters in Tamil represent the qualities of the *Dramatis Personae*. When the shepherds and shepherdesses are introduced, the language corresponds to the society to which the characters belong. I have omitted much that I found impossible to render into appropriate Tamil. As the Text stands, I think Indian theatres using the Tamil Language can put it on the boards. I owe thanks to Mr. C. N. Krishnaswami Aiyar, M.A., L.T., Editor of the Vidya Viharini, for the suggestion that I should bring out an adaptation of Shakespeare's Winter's Tale. I leave the Tamil public to judge how far I have succeeded in affording them reading matter in their own tongue.

KUMBAKONAM, K. VENKATARAMA AIYAR.

ஓம:

# மச்சான்

என்னும்

# மாரிகாலக் காதை.

6926

## ஸூத்ரதாரனும் விதூஷகனும்.

ஸூ—அன்பனே, உன்னைப்பார்த்து வெகுகாலமாயிற்று. உலகம் உடலுக்குடன் மாறிக்கொண்டு வருகின்றது. அம்மாறுத லுக்கு ஒத்துநடப்போமாயின் நாம்பிழைத்தோம்; அன்றேல் கெட்டோம். உன்தொழில் ஒழுங்காய் நடக்கின்றதா?

வி—உலகம் மாறுகின்றதென்றீரே? என்னைமாத்திரம் அடையா ளம் எப்படித் தெரிந்துக்கொண்டீர்? மீசை நரைத்தும் பற் கள் உதிர்ந்தும் போனாலும் மனிதரைத் தெரிந்துக்கொள்ளு தல் ஸுலபமன்று; அப்படியிருந்தும் இருபதுவருஷத்திற்கு முன் என்னைப் பார்த்த நீர் முதலெடுப்பிலேயே என்னை யறி ந்துகொண்டீர். உலகம் மாறுகிறதென்பது சுத்தமாயை. கதிரவன் ஒளி குன்றினனே? மேற்கிலுதிக்கின்றானே? பனிக்காலத்தில் குளிராமலிருக்கின்றதோ? வெயிற்காலத் தில் சுடவில்லையா? இயற்கைப் பொருள்களுடைய குணம் மாறவில்லை. மனிதரின் புத்தி மாறுபட்டத்தால் எல்லாம் மாறுவதாகத் தோன்றுகிறது. அவலை நினைத்துக்கொண்டு உரலை இடித்தலாகாது. ஆடு பட்டினியாயிருக்கிறதென்று ஓநாய் வருந்துதலுண்டோ? என்னைப்பற்றிக் கவலைவேண் டாம். உம்முடைய காரியத்தைச் சொல்லும். காலத்தை வீணாக ஏன் கழிக்கின்றீர்?

ஸு—பழைய சிநேகத்தைப்பற்றி உன்னுடன் அந்தரங்கமான விஷயங்களைக் கலக்கலாமென்றெண்ணி வந்தேன். நீ வெகு கொடிமுறுக்காய்ப் பேசுகின்றாய். நான் சொல்வதைச்செவி கொடுத்துக் கேட்கமாட்டாயென்று அஞ்சுகிறேன். பேச அனுமதிகொடுத்தால் பேசுகின்றேன். இல்லாவிடின் நான் சும்மா போகின்றேன்.

வி—உலகம் மாறியிருக்கிறது உண்மைதான்: உம்மிடத்திலேயே அந்த மாறுதல் விளங்குகிறது. ஆரியக்கூத்தாடினாலும் காரியத்தின்மேல் கண் என்பது புதுமொழியோ, பழமொழியோ? காரியத்தைச் சொல்வீராயின் இருவருக்கும் நலம்.

ஸு—உன்னிஷ்டப்படியே ஆகட்டும். பிரபஞ்சம் முன்போலவில்லையென்பது நான்சொல்லப்போகிற விஷயத்தால் உனக்கு விளங்கும். முன்காலத்தில் உன்னையும் என்னையும் பாத்திரங்களாக அமைக்காத நாடகம் உண்டா? நவீன நாடகக் கர்த்தர்கள் நம்மிருவரையும் கைவிட்டார்கள். இது மாறுதலன்றோ? தொடக்கத்திலேயே கதாநாயகர்களே நாடகசாலையில் பிரவேசமாகிறார்கள். நம்மிருவருக்கும் நாடகத்திற் பிழைப்பில்லை. நாடகமென்பதை கனவிலுங்காணாத ஒருவர் அன்னியபாஷையிலிருந்து ஒருநாடகத்தை மொழிபெயர்த்திருக்கிறார். அதை இந்தச்சாலையில் இன்று நடத்தவேண்டுமாம். உன் உதவியைக்கொண்டு நாடகாசிரியனுக்கு ஸகாயஞ் செய்யலாமென் றெண்ணுகிறேன். ஒத்தாசை செய்வாயோ?

வி—வெறும்வாயை மெல்லுகிறவனுக்கு அவலகப்பட்டால் போதாதோ? புதிய நாடகத்தின் கதையைச் சுருக்கமாய்ச் சொல்லி, எந்தவிதமான ரஸம் அதில் மிகுதி என்பதையுந் தெரிவியும். என்னாலானவற்றைச் செய்கிறேன்.

ஸு—இம்மட்டில் மனமிரங்கினதே பெரும்பாக்கியம். கதையைச் சொல்லுகிறேன். மச்சரன் என்று ஒரு அரசன் தாந்தி என்னும் உயர்குலப்பெண்ணை மணந்தான். இவ்விருவருக்

கும் பூரணன் என்று ஒரு பிள்ளை பிறந்தான். இவ்விலறத்தை ஒழுங்காய நடத்திவருகையில் மச்சானுக்கு பால்யசிநேகனான சுசீலன் வந்தான். மச்சானும் தாந்தியும் சுசீலனுக்குப் பலவகை உபசாரங்கள்செய்து கனம் பண்ணினார்கள். சுசீலன் சிறிதுகாலஞ் சென்றபிறகு தன்னூருக்குப்போக மச்சானை விடைகேட்டான். மச்சான் தோழனை அனுப்பிவிட இணங்காமல் பலவந்தப்படுத்தியும் சுசீலன்படிவாதமாயப் புறப்பட இருக்க, மச்சான் வேண்டுகோளின்படி தாந்தி சுசீலனை இன்னுஞ் சிறிதுகாலம் தன்வீட்டிலேயே இருந்துபோதல்வேண்டுமென்று மன்றுடிக்கேட்க, சுசீலனும் ஒருவாறு சம்மதித்தான். தாந்தி தன் கணவனிடத்திற்போய சுசீலன் கொஞ்சகாலம் அங்கேயே இருக்க உடன்பட்ட செய்தியை அறிவிக்க, மச்சான் மனம்புழுங்கி அடியில் ஒருமாறு எண்ணமிடலானான்:—“ நான் கேட்டபோது சம்மதிக்காத சுசீலன் என் மனைவி தாந்தி கேட்டபோது தடையொன்று மில்லாமல் ஒத்துக்கொண்டானே. என் மனைவியிடத்தில் அவனுக்குக் காதல் பிறந்திருக்கவேண்டும். பெண்கள் மோசக்காரர்கள் இவ்விருவரையும் கொன்றுவிடல்வேண்டும்.” அசத்தினமுரு முகத்தில் விளங்கிற்று. தாந்தி நடுக்கமுற்றாள். மச்சானேரு போலிப் புன்னகைகொண்டு தாந்தியை நோக்கி “ உன் சாமர்த்தியம் மெச்சத்தக்கது. என் நண்பனைத் தக்கபடி களிப்பி ” என்று சொல்லிவிட்டு, மந்திரியைக் கூப்பிட்டுத் தன் சமுசயங்களை வெளியிட்டுச் சுசீலனை விஷங்கொடுத்துக் கொலை செய்யும்படி ஆக்ஞாபித்தான். உத்தமபுருஷனான மந்திரி மச்சான் சொன்னதைக்கேளாமல் தானும் சுசீலனுமாய் மத்ஸ்ய தேசம் போய்விட்டார்கள். மச்சான் தாந்தியைப் பலவிதமாய்த் துன்பப்படுத்தினதால் அவள் மூர்ச்சித்துக் கீழே வீழ்ந்தாள். தாந்தியின் நட்பினள் ஒருத்தி அவள் இறந்தாளென்று வதந்தி பிறப்பித்து அவளைப் பதினாறுவருஷம் உயிரோடு காப்பாற்றிவந்தாள். மச்சானுக்கு உண்மை புலப்பட, அவன் புலம்ப ஆரம்பித்தான். தாந்தியின் நட்பினளான புனிதை மச்சானுக்குத் தாந்தி உயிரோடிருக்கிறதைக் காட்

டித் தாக்தியின் மகள் சுமதியின் விவாகத்தோடு கதை முடிவாகின்றது. சோகரஸம் மிகுதியாயும் சிங்காரரஸம் கொஞ்சமுமுள்ளது இந்த நாடகம், நீ உதவிபுரிவாயா?

வி—நீர் சொல்வது அந்தகனை ராஜவிழி விழிக்கச்சொல்வது போலாகிறது. ஹாஸ்யரஸம் கிஞ்சித்தேனுமில்லாத நாடகத்தில் என்போலியர்களுக்கு வேலையேயில்லை. அது நிற்க:-இந்த நாடகத்தைச் செய்தவர் யார்? அது எந்தப் பாஷையில் முதலில் எழுதப்பட்டுள்ளது.

ஸூ—முதல் நூல் இங்கிலீஷ் பாஷையில் எழுதப்பட்டுள்ளது. நாடககர்த்தாவின் பெயர் ஷேக்ஸ்பியர். இவருடைய அருமை பெருமைகளை எடுத்துச்சொல்ல ஆதிசேஷனாலுமாகா தென்னலாம். தத்வ சாஸ்திரிகள் ஷேக்ஸ்பியரைத் தமக்கு ஆசாரியனாகக் கொள்வார். பரமயோகிகள் அவரைப் பரமஹம்ஸரென்பார். பாமரஜனங்கள் இந்த மஹா புருஷனைத் தம்மிலொருவனாக எண்ணுவார். ஒவ்வொரு மனிதனுடைய ஹிருதயத்திலும் ஒளிந்துகிடக்கும் பரமரஹஸ்யங்களையும் மனோதர்மங்களையும் அறிந்தவர் ஷேக்ஸ்பியரே. சில அம்சங்களில் நமது நாட்டுக்கவிச் சிரேஷ்டராகிய காளிதாஸனுக்கும் மேலானவர் என்றே சொல்லவேண்டும். மொழிபெயர்ப்பவருடைய தவறினால் கவியின் மனோபாவங்கள் வெளிப்படாமற் போகலாமேயன்றிக் கவியின் குற்றம் ஒன்றுமிராது. எவ்வளவோ கோடிப்பேர் இக்காலத்தில் இங்கிலீஷ்பாஷை கற்றிருக்கிறார்கள். இங்கிலீஷூம் தேவகிருபை பெற்றதென்று தான் நாம் எண்ணவேண்டும். நமக்கு இங்கிலீஷ் ராஜபாஷையா யிருக்கின்றது. கவியும் பாஷையும் நம்மால் மதிக்கத்தக்கவை.

வி—காக்கைக்குத் தன் குஞ்சு பொன்குஞ்சு. நீர் இங்கிலீஷை உயர்த்திப் பேசுவதினாலேயே எனக்குத் தமிழிலுள்ள அபிமானங் குன்றுது. இங்கிலீஷ் படித்த கனவான்கள் இக்காலத்தில் தமிழிற் பேசினால் பெருமை குலைந்துபோமென்றெண்ணி ஸந்தியாவந்தன முதற்கொண்டு அந்தப்

பாஷையில் இல்லாமற்போனதால் அதைவிட்டுவிட்டார்கள் நீர் பழமை பாராட்டுஞ் சுபாவத்தைச் சிறிது வைத்திருப்பதால், ஷேக்ஸ்பியர் செய்த நாடகத்தைத் தமிழில் அரங்கேற்ற நினைத்தீர். உம்முடைய கருத்து நிறைவேறி உமக்கு மங்களமுண்டாவதாக. இந்த நாடகத்தில் எனக்கு வேலை மட்டுத்தான்.

ஸூ—சிறு துரும்பும் பற்குத்த உதவும். மனிதனொன்றிருந்தால் அவன் எதையாவது செய்ய உபயோகமாவான். ஹாஸ்ய ரஸத்திற்கு ஸந்தர்ப்பங்களுண்டாகும்போது உன்னாற் கூடியவற்றைச் செய்வாயென்பது என்னுடைய நம்பிக்கை. உனக்கும் மங்களமுண்டாகுக.



# நாடக பாத்திரங்கள்.

(1) மச்சரன்—சேதிநாட்டரசன்.

(2) பூரணன்—அரசகுமாரன்.

(3) நிருபன்
(4) கலியன் } மந்திரிகள்.
(3) தவன்

(6) நியமன்
(7) சுகன் } பிரபுக்கள்.

(8) சுசீலன்—மத்ஸ்யநாட்டரசன்.

(9) தருமன்—சுசீலன் குமாரன்.

(10) தேயன்—சுசீலன் தோழன்.

(11) நாவகன்

(12) சிறைக்காவலாளி.

(13) கோவிந்தன்—இடையன்

(14) கண்ணன்—இடையன்மகன்.

(15) சுயம்பு—முடிச்சுமாறி.

(16) காலன்.

(17) சாந்தி—மச்சரன் மனைவி.

(18) சுமதி—சாந்தியின் மகள்.

(19) புனிதை—சாந்தியின் தோழி

(20) மைத்ரீ ஷை

(21) மந்தை
(22) விந்தை } இடைப்பெண்.

# முதலங்கம்.

## முதற்களம்.

---

சேதிநாட்டில்

பிரவேசம்—நிருபனும், தேயனும்

**தேயன்**—நிருபா, நான் உன் நாட்டிற்கு விருந்தாக வந்திருப்பது போல், என் ஊருக்கு நீயும் வந்தால் இரண்டுநாட்டிற்குமுள்ள பேதம் உனக்கு நன்ருய்த் தெரியும்.

**நிருபன்**—எங்கள் அரசன் இளவேனிற்காலத்தில் உங்கள் நாட்டிற்கு வருவதாகப் பிரஸ்தாபித்துக்கொண்டிருக்கிருர்.

**தேயன்**—எங்கள் தேசத்திற்கு மச்சரன் வருவாராயின் நீங்கள் செய்திருக்கிற உபசாரத்தில் ஆயிரத்திலொரு பங்குகூட எங்களால் செய்யமுடியாதென்று எண்ணுகிறேன். எங்கள் எழ்மையை நினைக்க எனக்கு வெட்கமாயிருக்கிறது. அன்பில் உங்களுக்குத் தாழ்ந்துபோகமாட்டோம்.

**நிருபன்**—நீ உங்கள் நாட்டை இவ்வாறு இகழ்ந்துபேசுவது சரியல்ல; மத்ஸ்ய நாட்டிற்கு குறைவு என்னவந்தது ?

**தேயன்**—நான் அறிந்ததை ஒளிக்காமல் சொன்னேன். சேதிநாட்டின் விபவத்திற்கு மத்ஸ்யநாட்டின் விபவம் உறைபோடக்காணுது. பானத்திற்கு மதுவைப் போதுமானமட்டிற் கொடுத்து எங்கள் குற்றம் குறைகளை உணராமல் உங்கள் புத்தியை மயக்கிவிடுதல் எங்களாலாகும். மதிமயக்கத்தால் பிறர்மேல் குற்றஞ் சொல்லுதல் எவ்வாருகும் ?

**நிருபன்**—மிதமிஞ்சிக் கள்ளுண்டால் பெருங்கேடு விளையுமென்பதை அறியீர்போலும்.

**தேயன்**—என்புத்திக்கு எட்டினமட்டில் உன்னிடத்தில் சொன்ன தெல்லாம் உண்மை: ஒரு எழுத்துக்கூடப் பொய் கலக்க வில்லை.

**நிருபன்**—மச்சரனும் சுசீலனும் இளம்பிராயமுதல் இணைபிரியாத் தோழர்கள். அவ்விருவர் நட்பை யழித்தல் எவராலு முடியாது. பருவம் வந்தபின் ஒவ்வொருவரும் தம்தம் ராஜ்யபாரத்தை வகிக்கலானார். அடுத்தடுத்து இருவரும் கலத்தல் கூடாத காரியமாயினும், தூதர்களாலும், கடிதங்களாலும், பரஸ்பர உபசாரங்களாலும், தினமும் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டிருப்பவராகவே காலஞ் சென்றுவருகிறது. இத்தகைய சினேகிதனுக்குச் செய்யும் உபசாரங்கள் அதிக மென்றுஞ் சொல்லக்கூடுமோ? சேய்மை இவர்களுக்கு அண்மையாகவே இருந்தது. இவ்விருவரும் நட்பினராகவே நீடூழிகாலம் இருக்கக் கடவுள் அருள்புரிவாராக!

**தேயன்**—இவர் நட்பை அழிக்க ஒருவராலுமாகாது. மச்சரன் குமாரன் பூரணன் ஒரு பிறவிச்செல்வம். அவனைத் தரிசித்துக் கொண்டிருந்தாலே வினைகள்தீரும். விளையும் பயிர் முளையிலே என்றபடி இளவரசன் இப்போழ்தே குணநிதியா யிருக்கின்றான்; வயது முதிருங் காலத்தில் அவன் பெருமையை அளவிட முடியாது.

**நிருபன்**—ராஜ குமாரனைப்பற்றி நீ சொல்வது உண்மைதான். அவன் குணங்கள் உரைகடந்தன. அவனைக் கண்ணுற் பார்க்குங் கிழவரெல்லாம் இளம்பிள்ளைகளாக ஆய்விடுகிறார்கள். அவனிருக்குமிடத்தில் துக்கமே அணுகாது; கழி ஊன்றி நடக்கும் வயோதிகர்கள் பூரணன் பட்டத்திற்கு வந்து ராஜ்யபாரஞ் செய்வதைப் பார்த்தல் வேண்டுமென்று தமக்கு நீண்ட ஆயுளைப் பிரார்த்திக்கிறார்கள். இளவரசன் பாக்கியம் எங்களதே.

**தேயன்**—உங்கள் நாட்டுக் கிழவர்கள் இளவரசன் பட்டமடைந்து பார்க்கவென்று பிராணனை வைத்திருக்கிறார்கள்? இல்லாவிடின் உயிர்துறப்பார்களோ?

நிருபன்—தமக்கு வேறு லாபத்தை இந்நாட்டு மூத்தோர் விரும்பினாரில்லை.

தேயன்—மச்சரன் அபுத்திரனாயிருந்தால், அவனுக்குப் பிள்ளை உண்டாகும் வரையில் கிழவரும் உயிரை வைத்திருப்பாரென்பது நிச்சயம்.

# முதலங்கம்.

## இரண்டாங்களம்.

---

*மச்சரன் சபாமண்டபம்.*

பிரவேசங்கள்—மச்சரன், சுசீலன், காந்தி, பூரணன், நிருபன், வேலையாட்கள்.

சுசீலன்—ராஜ்யபாரக் கவலைகளைவிட்டு ஒன்பது மாதங்களாய் உம்முடைய விருந்தாடியாகக் காலங் கழித்துவிட்டேன், இன்னும் அவ்வளவுகாலம் நான் இங்கிருப்பேனாயினும், உமது அன்பிற்கும், எனது நன்றிக்கும் குறைவுவராதென்று நம்புகிறேன். நீர் எனக்குச் செய்த உபகாரங்களுக்குப் பிரதியாக வசனமூலமாய் எவ்வளவுசொல்லினும் போதாது. ஆகையால் நான் சொல்லும் சிலவார்த்தைகளை அநேக மடங்காக நீர் கிரகித்தல் வேண்டும்.

மச்சரன்—விடைபெற்றுப்போக நீர் இவ்வளவு துரையாயிருத்தலாகாது. நான் உம்மைப் பிரிய இப்போது உடன்படேன்.

சுசீலன்—நான் நாளைக்கே பிரயாணம் போக உறுதி செய்தேன். இவ்வளவு காலம் நாட்டில் இல்லாமையால் என்ன கேடுகள் விளைந்திருக்கின்றனவோ அறியேன். கேடு ஒன்றும் நேரிடாதிருக்கவேண்டுமென்று வேண்டிக் கொண்டிருக்கிறேன். உமக்கே தெவிட்டுத லுண்டாம்படியான அவகாசம் இங்கே நான் இருந்துவிடவில்லையா?

மச்சரன்—நீர் எத்துணை நாளிருந்தாலும் எனக்குச் சலிக்காது.

**சுசீலன்**—இனி இங்குத் தங்கியிருத்தல் கூடாத காரியம்.

**மச்சரன்**—இன்னும் ஒருவாரமிருந்து பின்பு போதலாகும்.

**சுசீலன்**—என் மனத்தில் செய்த உறுதியை மாற்றேன்.

**மச்சரன்**—ஒரு வாரப்பொழுதை நாமிருவருமாகவே கழிப்போம்; பின்பு தடையின்றி நீர் விடைபெற்றுப் போதலாகும்.

**சுசீலன்**—நீர் தடுத்துச்சொல்வது சரியன்று ; நீர் சொல்லிக் கேட்காத நான் யார்சொல்வதைக் கேட்கப்போகின்றேன். அவசிய காரியமிருக்குமாயின் உமது வார்த்தையையும் மீறி நடக்கத்தான் வேண்டி யிருக்கும். என்னூர்க்காரியம் இங்கு இனி நானிருத்தலுக்கு இடங்கொடாது. நீர் என்னிடத்தில் வைத்திருக்கிற அன்பை எண்ணிப்பார்த்தால் நான் போவதைத் தடுப்பதும் உமக்குத் தர்மமன்று. நான் இங்கிருப்பது உமக்கு வீண்செலவு ; இனி எனக்கு நீர் அதிகமாகச் சொல்வது யுக்தமன்று.

**மச்சரன்**—(சாந்தியை நோக்கி) என் நீ வாய்திறவாமலிருக்கின்றாய்? என் தோழனை இங்கே இன்னும் கொஞ்சகாலம் இருக்கப் பிரார்த்தித்துக்கொள்.

**சாந்தி**—தமது வேண்டுகோளுக்கு இணங்கமாட்டாரென்று உறுதிப் படுகிறவரையில் நான் பேசுவதாக எண்ணவில்லை. தாம் சுசீலனை இங்கே இருக்கக் கேட்டதில் அன்பு போதாதென்று எனக்குத் தோற்றுகிறது. மத்ஸ்ய நாட்டிற்குக் கேடு ஒன்றுமில்லை யென்று தாம் சொல்லலாகாதா? நேற்றுத்தானே நமக்கு ஸமாசாரம் தூதர்களால் வந்தது. இதைத் தாம் சொன்னால் அவர் மனத்தை மாற்றுவார்.

**மச்சரன்**—பேஷ் ! நல்ல வார்த்தை சொன்னாய்.

**சாந்தி**—சுசீலன் தன் குமாரனைப் பார்க்கவேண்டுமென்ற அவா மேலிட்டதென்று சொல்லி யிருந்தால் நாமிங்கிருத்துவது சரியாகாது. அவர் அவ்வாறுசொன்னாரில்லை. [சுசீலனை நோக்கி]

**சாந்தி**—உன் புருஷன் பெரிய கோமாளியாயிருந்தானன்றோ?

**சுசீலன்**—பாவம் என்பதை அறியாத இளம் ஆட்டுக்குட்டிகள் போல் சிசுப்பிராயத்தை நாங்கள் இருவருங் கழித்தோம். தீச் செயல் செய்வார் உலகிலுண்டென்று கனவிலுமெண்ணினோமில்லை. மனத்திட்பமுள்ள வேறு மனிதரைச் சேராமலேயிருந்தோமாயின், கடவுள் ஸந்நிதியில் பரிசுத்தராகவே எண்ணப்படுவோம்.

**சாந்தி**—தாங்கள் சொல்வதைக்கொண்டே யாதோ தவறுதல் நீங்கள் செய்திருப்பதாகத் தோன்றுகிறது.

**சுசீலன்**—அருமைத்தாயே, எங்களையும் மயக்கப் பேர்வழிகள் ஏற்பட்டார்கள். நாங்கள் சிறு குருவிகளாயிருந்தோம். என் மனைவி என்னையும் நீர் உம்முடைய புருஷனையும் உங்கள் வலையிலகப்படச் செய்தீர்கள்.

**சாந்தி**—என்னையும் உமது மனைவியையும் உங்களைத் தீவழிப்படச் செய்தவர்களாகவா சொல்லுகிறீர்? நன்றாயிருக்கிறது. எங்கள் கூட்டுறவால் நீங்கள் செய்திருக்கிற பாவங்களைத் தவிர்த்து வேறு தீவினைகள் செய்யாதவரென்று நம்புகிறேன்.

**மச்சான்**—(சாந்தியை நோக்கி) நமது நண்பர் மனத்தை மாற்றியாயிற்றா இல்லையா?

**சாந்தி**—சுசீல ராஜா இங்கிருக்க உடம்பட்டுவிட்டார்.

**மச்சான்**—என் வாக்கைப் பொருட்டாக நினைக்காதவர் உன் வாக்கை மதித்தார். உன் பேச்சு பலமானதே.

**சாந்தி**—நற்கருமத்தைப் புகழாமையானது மேலும் மேலுஞ் செய்யக்கூடிய நற்கருமத்தைத் தடைசெய்யும். போற்றப்படுதலே எங்களுக்குக் கூலியாகும். என் பேச்சு வீண் போனதேயில்லை. முதலில் பேசினது உம்மைக் கணவனாக வரித்த காலம். அது வீண்போகவில்லையென்பதற்கு ருஜு வேண்டியதில்லை. இரண்டாமுறை நான் பலமா

கப் பேசினது சுசீல ராஜாவை இங்கேயே சிறிது கால மிருக்க வேண்டினது. இவ்விரு முறையும் என் வாக்கு வீண்வாக்காகவில்லை.

[சாந்தி, சுசீலன் பற்றவேண்டுமென்று தன் கையை நீட்ட]

**மச்சரான்**—[தனக்குள்ளே] கைகலந்தால் மனங்கலக்க நாளா குமோ? என் மனம் துடிக்கின்றது; ஆனால் களிப்பினா லன்று; என் மனைவியும் சுசீலனும் ஒருவரை ஒருவர் பார்த் துப் புன்முறுவல் கொள்வதும் கைகலத்தலும் நன்மைக் கன்று. இவ்விருவரும் இவ்வளவு நட்புப்பாராட்டுதலைக் காணுதலும் என் மனத்தை வருத்துகின்றது, [தன் குமா ரன் பூரணனை நோக்கி] பூரணா, நீ என் பிள்ளைதானா?

**பூரணன்**—தமக்குச் சந்தேகம் ஏன் பிறந்தது? நான் தமக்குப் பிறந்தவனே.

**மச்சரான்**—உன் வசனம் என்னைப்போலல்லாமல் மிருதுவாயிருக் கிறது; என்னைப்போல் உனக்குத் தாடிமீசைகள் உண்டா தல் வேண்டும். யோசனையில்லாமற் பேசுகிற ஸ்திரீகள் உன்னையும் என்னையும் ஒரே அச்சு என்கின்றார்கள். உன் தாமரைக் கண்ணால் என்னை நிமிர்ந்துபார். உன் தாயிடத் தில் வஞ்சனை யாதாயினுமிருக்கலாமோ? அவள் பதி விரதைதானா? ஐயப்பட்ட என்மனம் நோகின்றது.

**சுசீலன்**—மச்சரா, என்ன உமக்குள்ளேயே பேசிக்கொண்டிருக் கிறீரோ?

**சாந்தி**—என் பர்த்தாவின் மனம் கலக்கமுற்றிருக்கிறது.

**சுசீலன்**—அன்பனே, உமக்கு வந்தநோயென்ன? ஏன் கவலை யுற்றவராய்க் காண்கின்றீர்?

**சாந்தி**—நாதா, தமக்கு மனக்கலக்கம் வந்திருப்பதேன்?

**மச்சரான்**—ஏதையோ நினைத்துக்கொண்டிருந்த காலத்தில் புத் திக்குச் சிறிது மாறுதல் வந்தது. என் குமாரன் முகத்தை உற்றுப் பார்த்துக்கொண்டிருக்கையில் அவன் வயதில் நானி

ருந்த நிலைமை எனக்கு ஞாபகம் வந்தது. ஒட்டுச்சல்லடம் போடாமலும் பட்டாடை உடுத்தியும் வாளைக்கட்டிக்கொண் டும் விளையாட்டுப்பருவமாயிருந்ததை எண்ணினேன். இச்சிறு வனும் அப்படித்தானிருக்கிறான். [பூரணனை நோக்கி] குழந் தாய், கோழிமுட்டையைப் பொன்னென்று நினைப்பாயோ?

**பூரணன்**—பிதாவே, நான் அப்படிச் செய்யேன். வாளெடுத்துப் பகைவர்களை வெல்வேன்.

**மச்சான்**—உனக்கு மங்களமுண்டாகுக; [சுசீலனை நோக்கி] என் குமாரனிடத்தில் நான் எவ்வளவு குலாவிக்கொண்டிருக்கின் றேனோ, அப்படித்தானே நீரும் உமது மதலையிடத்திலிருக் கின்றீர்?

**சுசீலன்**—வீட்டிலிருக்கிறவேளையில் என் குமாரனே என் காலத் தை முற்றிலும் தனக்காக உடையவன். அவனே எனக்கு வேலை கொடுப்பவன்; அவனே என் ஆநந்தம்; அவனே எனக்கு ஐசுவரியம். ஒருவேளையில் அன்பாயும் மற்றொருவே ளை வெறுப்பாயுமிருப்பான். அவனே என்னைப் புகழ்பவன்; அவன் தான் எனக்கு யுத்தவீரன்; அவனே அரசு செலுத் துபவன். முதுவேனிலின் நீண்டபகலைக் குறுக்குபவன் அவனே. அவன் பாலசேஷ்டைகளை எனக்குப் பிரம்மாநந் தத்தைத் தருவன.

**மச்சான்**—பூரணனும் எனக்கு அப்படித்தானிருக்கிறான். நாங்க ளிருவரும் காற்றிலுலாவப் போகின்றோம். நீரும் என் மனை வியும் காலப்போக்கைச் செய்யுங்கள். [சாந்தியை நோக்கி] சாந்தி, என்னிடத்துள்ள அன்பை என் நண்பரிடத்திலுங் காட்டி உபசரிப்பாயாக. உமக்கும் நமதுகுமாரருக்கும் அடுத் தபடி என்னால் விரும்பப்பட்டவர் சுசீலரென்று அறிவாய்.

**சாந்தி**—சுசீலரும் நானும் நந்தவனத்தில் உலாவுவோம். தாம் எம் மோடு வந்து சேரலாம்.

**மச்சான்**—உங்களிஷ்டப்படி நீங்கள் செய்யலாகும்; பூமியிலிருந் தால் அகப்படாமற் போகிறீர்களா? [தனக்குள்ளே] கயிற்

றைத் தளர்த்திவிட்டுப் பார்க்கிறேன்! உங்கள் யோசனை அப்போது நன்ருய் விளங்கும். முகத்தோடு முகத்தைச் சேர்த்து முத்தமிட்டுக் கொள்ளுகிருர்கள்-ஆ-தாலிகட்டின ஸ்திரீயும் புருஷனும்போலக் கைகோத்தா உலாவுகிறீர்கள்? இதுவும் ஒரு அழகுதான்.

> கைப்பிடி நாயகன் தூங்கையிலே அவன் கையையெடுத்
> தப்புறந் தன்னி லசையாமல் முன்வைத் தயல்வளவில்
> ஒப்புடன் சென்று துயிலீத்துப் பின்வந் துறங்குவளை
> எப்படி நானம்புவேன் இறைவா கச்சியே கம்பனே, என்று

மூத்தோர் சொன்னது இங்குப் பிரத்யக்ஷமாய்க் காணப்படுகிறது. இல்லறம் இன்ருேசது, இன்ருேசது, ஐயமில்லை. நிருபன் இங்கிருக்கின்ருறே?

நிருபன்—காத்திருக்கிறேன், ஸ்வாமி.

மச்சரன்—பூரணு, நீ போய் விளையாடு, நல்லபிள்ளை. [நிருபனை நோக்கி], நிருபா, இந்தப்பெரியவர் இன்னும் பிரம்ப நாள் இங்கேயே இருப்பார்போலிருக்கிறது.

நிருபன்—“பொனுற்போல் வந்தான் புதுமாப்பிளை” என்பது போல் உம்முடைய முயற்சியாலேதான் அவர் இங்கே யிருக்கிருர்.

மச்சரன்—உனக்குப் புத்தியிற் பட்டதா?

நிருபன்—நீர் வேண்டும்போது வேலை மிகுதி யென்றுசொன்னுர்.

மச்சரன்—எல்லாவற்றையுங் கவனித்திருக்கிருயே. அதோ பார், இருவரும் இரகசியம் பேசிக்கொள்கிருர்கள். சேதி நாட்டரசியின் செய்தி நன்ருய்ப் புலப்படுகிறது:மோசந்தான். புஸ்தகம் வனிதா வித்தம் பரஹஸ்தகதம் கதம்: அதவா புன ராயா தம் ஜீர்ணுப் பிரஷ்டாச கண்டச: என்று பெரியோர் வீணுகவா சொன்னுர்? அவ்விருவருக்கும் அகலா நட்பு முற்றிவிட்டது; இதை நான் பொறுத்தலாகாது. ஊரிற் காரியம் மிகுதியாயிருக்கிறதென்று சொன்னவர் என் னின்று போட்டார், தெரியுமா?

நிருபன்—நமது நல்லரசியின் பிரார்த்தனைக்கு இணங்கித்தான்.

மச்சரன்—நல்ல என்ற அடைமொழி கூறவுந் துணிந்தாயோ? உனக்குப் புத்தி மழுங்கிப் போயிற்று. குட்டிச்சுவரில் முட்டிக்கொள்ள வெள்ளெழுத்தா? சுசீலனுக்கு இங்குத்தான் வேலை இருக்கிறது. கண்ணுள்ளவர் காணலாம்.

நிருபன்—சுசீலருக்கு என்னவேலை இருக்கிறது? கொஞ்சகாலம் இங்கிருக்கப் போகிறரென்றுதான் எல்லோருஞ் சொல்லுகிறார்கள். தாமும் தமது பட்டமகிஷியும் கேட்டுக்கொண்டபடிதான் இங்கு இருக்கிறார்.

மச்சரன்—பட்டமகிஷி என்று சொல்லலாகாது; மஹிஷியென்று சொல்லவேண்டும். சாந்தி ஒரு மிருகந்தான். நிருபா, என் அந்தரங்கங்களை நீ அறிவாய். உன்னுடைய மந்திராலோசனையினல் நான் செம்மைநெறி வழுவாமலிருந்திருக்கிறேன். உன்னிடத்தில்நான் விசுவாஸம் வைத்தது தவறென்று இப்போது எனக்கு நன்றாய்ப் புலப்படுகிறது.

நிருபன்—நான் தமக்கு அபராதஞ் செய்யத் துணிந்ததேயில்லை? தாம் என்மேற் கோபங்கொள்ளலாகாது.

மச்சரன்—உன்னுடைய நேர்மை குறைந்துவிட்டது. நம்பினவரை வஞ்சித்தல் பாபமென்று அறியாய்போலும். கடமையைச் செலுத்துவதில் உபேக்ஷையாயிருத்தலுங் குற்றந்தான். சுசீலனும் என்மனைவியும் செய்யும் பிழைகளைக் கண்ணுற்றும் நீ சும்மாவிருக்கின்றயே. வேடிக்கையையும் வினையையும் ஆராய்ச்சி செய்து ஒழுங்காய் நடக்க உனக்குப் புத்தியில்லை.

நிருபன்—அச்சம், அசிரத்தை, மௌட்டியம் என்னும் முக்குணங்கள் மனிதர்க்கெல்லாம் இயல்பு. தங்கள் சேவகத்தில் இக்குணங்கள் என்னிடத்தில் காணப்பட்டிருக்குமாயின் நான் அபராதிதான். தங்கள் கருத்தை எனக்குத்தெளிவாய்ச் சொன்னால் என் குற்றங்களை மாற்றிக்கொள்ளுவேன்.

மச்சரன்—உனக்குக் கண்ணும்காதும் அற்றுப்போய்விட்டனவா. என்மனைவி எனக்குத் துரோகம் எண்ணி அயற்புருஷனிடத்

இல் அன்பு வைத்திருக்கிறுளென்று உனக்குத் தெரியாதா? உலைவாயை மூடலாம், ஊர்வாயை மூடலாமா?

நிருபன்— அரசியின்மேல் இவ்வாறு அவதூறு சொல்பவர்களைக் கொல்லாமல் விடேன். தமது வாக்கில் எக்காலத்தும் இத்துணை தவருன சொற்கள் பிறக்கவில்லை. தாம் சொன்னவற்றைத் திரும்பவும் சொன்னேனுகில், என் நாவழுகி நாலும் நரகத்தையடைவேன். உத்தமிகளை நிந்தித்தல் என்றுங் கூடாது.

மச்சரன்—பரபுருஷரோடு உலாவுதலும், இரகசியம் பேசுதலும், கண்டபோதெல்லாம் புன்முறுவல் செய்தலும், பெருமூச்செறிதலும், நள்ளிரவிற் குலாவுதலும், கற்பின் மகளிர்க்கு லக்ஷணங்களோ? முழுப்பூசனிக்காயைச் சோற்றில்மறைக்கப் பார்க்கிருயே, "தற்காத்துத் தற்கொண்டார்ப் பேணித் தகைசான்ற சொற்காத்துச் சோர்விலாள் பெண்" "சிறைகாக்குங் காப்பெவன் செய்யு மகளிர் நிறைகாக்குங் காப்பே தலை" என்றவாறு பதிவிரதைகள் பரபுருஷர்களை நிமிர்ந்தும் பார்க்கலாகாதென்று விதியேற்பட்டிருக்க நீ புகழ்ந்து பேசும் அரசி செய்கின்ற காரியங்களால் இவளைக் கற்புடையளென்று சொல்லத் தகுமோ?

நிருபன்—மஹாபிரபுவே, தமக்கு ஐயநோயுண்டா யிருக்கிறது; அதை சொஸ்தஞ் செய்தற்கு உபாயந் தேடவேண்டியது அவசியமாயிருக்கிறது. இந்த நோயைப் பெருகவிட்டால் ஆபத்து நேரிடும்.

மச்சரன்—நான் சொன்னவையெல்லாம் நிஜம்.

நிருபன்—நான் நிஜமென்று நம்பமாட்டேன்.

மச்சரன்—நீ பொய்யன்; பெரிய துரோகி; காலத்துக்குத் தக்க கோலஞ் செய்பவன்; நன்மை தீமை தெரிந்தும் தீநெறியில் நீ அன்பு வைத்தவன். என் சோற்றைத் தின்று வளர்ந்த நீ என் மனம் நோவச்செய்யும் பாவிக்கு விஷத்தைக்கொடுத்துக் கொல்லவேண்டியவனுயிருக்க, அவனுக்குப் பரிந்து

பேசுகின்றாய், உன்னிலுங் கொடியவன் உலகிலில்லை, விசுவாச காதகன்.

**நிருபன்**—தாம் அரசியைப்பற்றிநினைப்பதில் ஆயிரத்திலொருபங்கு குற்றம் அவ்வுத்தமியிடத்திலிருப்பினும், உமது சத்துருவைச் சித்திரவதை செய்ய அஞ்சமாட்டேனென்பதை அறியவும்.

**மச்சரன்**—எனக்குப் புத்தி போய்விட்டதென்று நினைத்தாயோ? அரசியைக் கற்பிழந்தவளென்று சொல்வதினாலுண்டாகும் அபவாதத்தை நானறியேனா? பிள்ளை எனக்குப் பிறந்தவனென்றென்கிறேனா? வெறியனிடத்தில் பேசுவதைப்போற் பேசுகின்றாயே.

**நிருபன்**—தாம் சொல்வதையே வாஸ்தவமென்று ஒத்துக்கொள்ளுகிறேன். பத்ஸ்யநாட்டரசனை ஒழித்துவிடுகிறேன். மேல் நான் தங்களுக்குச் செய்துகொள்ளும் மனு ஒன்றுண்டு. அதாவது:— தமது குமாரனை உத்தேசித்துத் தமது அரசியைத் திரும்பவும் அங்கீகரித்தல் வேண்டும்; அன்றேல் உலகம் பழிக்கும்.

**மச்சரன்**—நீ சொன்னபடியே ஆகட்டும்.

**நிருபன்**—ஸந்தோஷமாயிற்று; நெஞ்சங் கடுத்ததைச் சுசீலருக்கு எத்துணையுங் காட்டலாகாது. விருந்துகள் வழக்கம்போலவே நடக்கட்டும். அரசியும் தமக்குண்டாயிருக்கும் ஐயத்தை அறியாதிருக்க வேண்டும். சுசீலர் பிழைத்திருந்தால் நான் தமது சேவகனாக இருக்கமாட்டேன். இது ஸத்தியம்.

**மச்சரன்**—அவ்வாறே செய்யக்கடவாய்; செய்தால் என் அன்பு குன்றாது; அன்றேல், நீ உயிர் பிழைத்திருத்தலுமரிது.

**நிருபன்**—தங்கள் ஆணைப்படி நடக்கின்றேன், ஸ்வாமி.

**மச்சரன்**—நானும் சுசீலனிடத்தில் நண்பன்போல்நடிக்கின்றேன்.

**நிருபன்**—விரட்ராதியான தாந்தி, உனக்கு என் இந்த அபவாதம் வந்தது? சுசீலரை நாம் விஷமிட்டுக் கொலைசெய்தால் எனக்குக் அந்தஸ்து உயருமாம். இதுதான் ராஜகட்டளைக்கு

கீழ்ப்படிதலாம். அக்ருன் தன்னைச்சேர்ந்த எல்லோரும் அக்ரூர்களாயிருத்தல் வேண்டுமென்கின்றான். இதற்குடம் படாவிட்டால் எனக்குப் பிராணஹானியாம். உலக சரித்தி ரத்தில் அரசரைக் கொன்று உயர்ந்தபதவியை அடைந்தவர் ஒருவருமில்லை. பிரூணாபாதகர்களும் ராஜதுரோகம் செய்யத் துணிந்ததில்லை. நான் இனி மச்சரராஜன் சேவகத்திலிருப் பதில்லை. கடவுளின் கிருபை எனக்கு வேண்டும். சுசீலர் இதோ வருகின்றார்.

**சுசீலன்**—நிரூபரே, உமக்குவந்தனம்: நான் இங்கிருப்பது கசந்து போயிற்று. என்ன, பேசாமற் போகிறீரே?

**நிரூபன்**—தமக்கு வந்தனம் அளிக்கிறேன்.

**சுசீலன்**—அரண்மனையில் விசேஷமென்ன

**நிரூபன்**—அதிசயமாய் ஒன்றும் நடக்கவில்லை, பிரபுவே.

**சுசீலன்**—மச்சரன் முகத்தைப்பார்த்தால், ராஜ்யம் இழந்தவனு கத் தோன்றுகிறது. நான் வழக்கம்போல் உபசாரவார்த்தை சொன்னதற்கு மறுமொழி ஒன்றுஞ்சொல்லாமலே அலக்ஷிய மாய்த் தன் உதட்டைப் பிதுக்கிக்கொண்டு போய்விட்டான். அவன் மனம் மாறியிருத்தலுக்குக் காரணம் எனக்கு ஒன்றும் புலப்படவில்லை.

**நிரூபன்**—மச்சரனுடைய மருமத்தை அறிய நான் துணிய மாட் டேன், ராஜனே.

**சுசீலன்**—துணியமாட்டேனென்று ஏன் சொல்லுகிறாய்? உன் உட்கருத்து எனக்குப் புலப்படவில்லை. உனக்குத் தெரியா மல் எந்தக்காரியம் நடக்கும்? நீ நல்லவனையிற்றே. உன் ஜாடைகள் மாறியிருத்தலே ஒரு கண்ணாடியாயிருக்கிறது. கைப்புண்ணிற்குக் கண்ணாடி வேண்டுமோ? இந்த மாறுதல் என்னையும் பாதிக்குமென்றுதான் நான் நினைக்கின்றேன்.

**நிரூபன்**—சில வியாதிகள் நம்முடைய குணத்தை மாற்றிவிடுகின் றன. வியாதியின் பெயரை மாத்திரம் நான் சொல்லமாட் டேன். உம்மால் இந்த வியாதி பரவியிருக்கிறதென்பது நிச்சயம்; உமக்கு மாத்திரம் ஒரு நோயுமில்லை.

சுசீலன்—என்னிடமிருந்து பிறருக்கு நோய் வருகிறதென்று சொல்லுகிறாய்? நான் கொள்ளிக்கண்ணனன்றே. என் முகத்தில் விழித்த எத்தனையோ ஆயிரம்பேர் க்ஷேமத்தையடைந்திருக்கிறார்களே. நீ உத்தமர்கள் வம்சத்திலுதித்தவன். உன் மாதாபிதாக்கள்மேல் ஆணையிடுகின்றேனை, மச்சரனுக்கு என்னிடத்தில் வெறுப்பு வந்ததற்குக் காரணத்தை நீ எனக்குச் சொல்லித்தான் தீரவேண்டும்.

நிருபன்—தமது கேள்விக்கு உத்தரஞ் சொல்லமாட்டேன்.

சுசீலன்—என்னுடலில் நோயொன்று மில்லாமலிருக்க, என்னாற் பிறர் வியாதியஸ்தராகின்றாரென்பது புதுமையாயிருக்கின்றது. நீ நேர்மை யுள்ளவனென்று நான் அறிந்திருக்கிறேன். என்னிடத்தில் யாதோ ஆபத்து வந்துகொண்டிருக்கிறது. அதினின்றும் தப்பும் வழியை நீ தான் எனக்குச் சொல்ல வல்லவன்.

நிருபன்—நீர் ஆணையிட்டபிறகு யாதொன்றையும் ஒளித்தல் தகுதியன்று. வெள்ளம் வருவதற்கு முன்னமே அணைகோலி வைத்தால்தான் தீங்குறும்.

சுசீலன்—சொல்லவேண்டியவற்றை யெல்லாஞ் சொல்லிவிடு.

நிருபன்—நானே உம்மைக் கொலைசெய்யவேண்டுமாம்.

சுசீலன்—எவருடைய கட்டளை இது?

நிருபன்—மச்சராராஜன் ஆக்ஞை.

சுசீலன்—எதற்காக நான் கொலைசெய்யப்படவேண்டுமாம்!

நிருபன்—நீர் எங்கள் அரசி தாந்தியினுடைய கற்பையழித்துவிட்டீராம்.

சுசீலன்—நாராயண, நாராயண, இன்னொருமுறை இந்த வார்த்தை என்செவியிற் போடாதே. நீ சொல்லுகிற பாவத்தை நான் செய்திருந்தேனையின் என் தலை ஆயிரஞ் சுக்கலாக இங்கே வெடித்துப்போகட்டும். நான் பேரற்று ஊரற்று நாசமாய்ப் போவேனாக. நீ சொல்வது அபூதக்கற்பனையா யிருக்கின்றதே; என் மனம் பதைக்கின்றது, நிருபா.

நிருபன்—நீர் ஆயிரம் சத்தியஞ்செய்தாலும் மச்சரன் நம்பப்போகி றதில்லை. சந்திரனைக்கண்ட கடலைப் பொங்காதிருக்கச்செய் தாலுஞ் செய்யலாம்; மச்சரன் குரங்குப்பிடியை மாற்றல் கூடாத காரியம்.

சுசீலன்—மச்சரனுக்கு இந்த விபரீத புத்தி என் பிறந்தது?

நிருபன்—அந்தக் காரணத்தை விசாரித்தலாற் பிரயோஜன மில்லை. வந்த கேட்டிலிருந்து தப்ப வழிதேடவேண்டுமே யன்றிக் கேட்டின் மூலத்தை யறிவதனு லாவதொன்று மில்லை. நான் உமக்குச்சொன்ன ஒவ்வொரு வார்த்தை யும் உண்மையென்று பிரமாணஞ்செய்கிறேன். நாமிருவ ரும் உயிர்தப்பி யோடுவதே உத்தமமான உபாயம். அரண் மனைக் காவற்காரர்கள் என் வருதிக்குட்பட்டவர்கள். கதவு களின் சாவிகள் என்னிடத்துள்ளன. ராஜதண்டனைக்குட் பட்டவர் தப்புவதரிது.

சுசீலன்—நீ சொல்வதை எல்லாம் நம்புகிறேன். மச்சரன் அகத் தினழகு முகத்திலே விளங்கிற்று. நீ என்னை விட்டுப் பிரி யாமல் இந்த ஆபத்தினின்றும் விடுவிக்கக்கடவாய். என் வாகனங்கள் ஆயத்தமா யிருக்கின்றன. விருந்தும் மருந்தும் மூன்று நாள் என்று பெரியோர் சொன்னதை மறந்ததனுல் வந்த கேடு இது. இரண்டு நாள் முன்னமேயே நான் இவ் வூரை விட்டுப் போயிருக்கவேண்டும். தாந்தி ஸ்திரீ ரத்தி னம். இவளைப்பற்றி மச்சரன் கவலை கொள்ளுதல் இயற்கை தான். தாமதமென்பது கூடாது. அரசிக்கு நாம் போகிறோ மென்பதை மாத்திரஞ் சொல். இவ்வூரினின்று என்னை வெளிப்படுத்துவாயின் நீயே என்னைப் பெற்ற பிதா ஆவாய்.

நிருபன்—என் வசம் திறவுகோல்களிருக்கின்றனமையால் வெளி யிற் போதல் கடினமல்ல. நாம் போவோம், வாரும்.

முதலங்கம் முற்றிற்று.

# இரண்டாமங்கம்.

## முதற்களம்.

மச்சரன் மாளிகை.

பிரவேசம்—தாந்தி, பூரணன், சேடிமார்.

**தாந்தி**—சேடி, குழந்தை என்னை உபத்திரவஞ்செய்கிறான்: என்னாற் பொறுக்க முடியவில்லை. உன்னிடத்தில் அவனை வைத்துக்கொள்.

**முதல் சேடி**—வாரும் இளவரசனே, நீரும் நானும் விளையாடுவோமா?

**பூரணன்**—நான் உன்னண்டை வரமாட்டேன், போ.

**முதல் சேடி**—என் என்மேற் கோபங்கொண்டு மறுக்கின்றீர்?

**பூரணன்**—என்னைச் சிசுவாக எண்ணிச் சும்மா முத்தமிட்டுக் கொள்ளுகின்றாய். உன்னிடத்தில் எனக்கு வேறு வெறுப்பு இல்லை. என் தாயின் மற்றொரு சேடி இருக்கின்றாளே, அவளிடத்தில் எனக்குப்பிரியம் அதிகமாயிருக்கிறது.

**இரண்டாஞ்சேடி**—என்னிடத்தில் தமக்கு அன்பு அதிகமாயிருப்பதேன்?

**பூரணன்**—உன்னுடைய புருவங்கள் கறுத்துப் பிறைச்சந்திரன் போல் வளைந்திருக்கின்றன. அப்படி யிருந்தால்தான் பெண்களுக்கு அழகு.

**இ-சேடி**—மகாராஜனே, உமக்கு இதை யார் கற்பித்தார்?

**பூரணன்**—பெண்களுடைய முகத்தைப் பார்த்து நானே அறிந்து கொண்ட விஷயம் இது. (முதற்சேடியை நோக்கி) உன் புருவங்களின் நிறமென்ன?

**முதற் சேடி**—நீலமாயிருக்கின்றன பிரபுவே.

**பூரணன்**—நீல மூக்குடைய பெண்களைக்கண்டதுண்டு. புருவம் நீலமாயிருத்தலைப் பார்த்ததேயில்லை.

இ-சேடி—உம்முடைய தாயாருக்குப் பிள்ளை பிறக்கப்போகின்ருன். நாங்கள் இருவரும் அவனைச்சீராட்டிக்கொண்டிருந்தல்வேண்டும். அப்போது எங்களுக்கு இஷ்டமிருந்தால் உம்முடன் குலாவுவோம்.

முதற் சேடி—பிரஸவிக்கிற காலம் கிட்டிப்போயிற்று. தெய்வ கிருபையால் அரசி ஸௌக்கியமாகவேண்டும்.

தாந்தி—என்ன பேசிக்கொண்டிருக்கின்றீர்கள்? அப்பா குழந்தாய், நீ என் கிட்டவா, ஒரு கதை சொல் பார்ப்போம்.

பூரணன்—வேடிக்கைக் கதை வேண்டுமா, சோகரஸமாய் வேண்டுமா?

தாந்தி—வேடிக்கையாகவே இருக்கட்டும்.

பூரணன்—கார்காலத்தில் துக்கமான கதையே நல்லது. பேய் பிசாசுகளின் கதை ஒன்று இருக்கிறது.

தாந்தி—பேய் பிசாசுகளால் என்னை பயமுறுத்தப் பார்க்கிருய். நீ எதைச்சொன்னுலும் எனக்கு இஷ்டம்.

பூரணன்—ஒரே ஒரு ஊரிலே ஒரு மனிதன் இருந்தான்.

தாந்தி—குழந்தாய், உட்கார்ந்துகொண்டு சொல்லு.

பூரணன்—அவன் வீடு ஒரு சுடுகாட்டண்டையில் இருந்தது. நான் காதோடு சொல்கிறேன். சுவர்க்கோழிகளுக்கும் நான் சொல்வது கேட்கப்படாது.

தாந்தி—என் காதில்மட்டும் படும்படிச் சொல்லு.

(பிரவேசம்=மச்சரான், கலியன், பிரபுக்கள் மற்றவர்கள்.)

மச்சரான்—சுசிலனை அங்குக்கண்டீர்களா? அவனுடனிருந்தவர்கள் யாவர்? கிருபன் அவர்களுடன் இருந்தானு?

முதற்பிரபு—ஸாலவிருக்ஷக்காட்டில் அவர்களைக்கண்டேன். அவர்கள் ஓடின வேகத்தை என்னென்று சொல்வேன்! அவர்கள் தோணியில் ஏறினதையும் நான் கண்டேன்.

மச்சரான்—நான் நினைத்தபடியே எல்லாம் நடந்திருக்கிறது. னக்கு இவ்வளவு ஞானத்தைக்கடவுள் கொடாமலிருந்

தால் நலமாயிருக்கும். பானத்துக்கு வைக்கப்பட்ட நீரில் பூச்சி ஒன்று விழுந்ததை யறியாமலே ஒருவன் அந்த நீரைப் பருகுவானாயின் அவனுக்கு நோய் ஒன்றுமில்லை. பூச்சியைக் கண்ணுற் கண்டபிறகு அந்த நீரைக் குடிக்கும் மனிதன் வாந்தி எடுத்துத்துன்பப்படுவான். என் கதி பின் சொன்ன வனுடையதுபோலாயிற்று. சுசீலனும் என் மனைவியும் குலாவிக்கொண்டிருந்ததை நிதர்சனமாய்ப் பார்த்துவிட்டேன். நிருபன் இவ்விருவருக்கும் உடந்தையாயிருந்திருக்கிறான். என்னைக் கொலை செய்யச் சதியோசனை செய்திருக்கிறார்கள்; என் அரசையுட் பிடுங்கிக்கொள்ளப் பார்க்கிறார்களென்பது திண்ணம். நிருபன் உண்ட வீட்டிற்கு இரண்டு நினைத்தவன். என் மருமங்களை யறிந்து சுசீலனுக்குச் சொல்லி இருவரும் ஓடிப்போயிருக்கிறார்கள். கோட்டைக் கதவுகளை அவர்களுக்குத் திறந்தவன் எவன்?

முதல்பிரபு—ஸர்வாதிகாரம் பெற்ற நிருபன் உத்தரவினுல்தான் திறக்கப்பட்டிருக்கும். தாமே அவனுக்கு அதிகாரம் கொடுக்கவில்லையோ?

மச்சரன்—அதெல்லாம எனக்குத் தெரியும். [சாந்தியை நோக்கி] பூரணனை என்னிடத்தில் விடு: நல்லவேளையாக அவன் உன் பாலையுண்டு வளர்ந்தவனல்ல; சில அம்சங்களில் பூரணன் என்னைப்போலிருந்தாலும், உன் உதிரம் அவன் சரீரத்தில் அதிகமாய் கலந்திருக்கின்றது.

சாந்தி—நாதா, இது என்ன பரிகாசம் செய்கின்றீர்?

மச்சரன்—இந்தச் சண்டாளியிடத்தில் என்பிள்ளையை இருக்க விடாதே. சுசீலனுக்கு பிள்ளை பிறக்கப்போகிறது. அதை வைத்துக்கொண்டு அவள் மகிழட்டும்.

சாந்தி—நாதா, தாம் இவ்வாறு என்னை பார்த்துச்சொல்வது தருமமா? நான் அகோரப்பிரமாணஞ் செய்கிறேன். என்னிடத்தில் கொஞ்சமும் தவறுதலே இல்லை. வாதத்திற்கு மருந்துண்டு, பிடிவாதத்திற்கு வைத்தியமே இல்லை.

மச்சான்—பிரபுக்களே நீலிக்குக் கண் நெற்றியிலே;—விலைமோரில் வெண்ணெய்யெடுத்துத் தலை மகனுக்குக் கலியாணஞ் செய்கிறவர்கள் பெண்கள். வெளுத்ததை யெல்லாம் பாலென்று கொள்ளலாகாது. இந்தப் பாதகியின் பேச்சைக்கேட்டு மயங்காதீர். அவள் விபசாரி.

தாந்தி—எட்டுணைப்பாவி தாம் சொன்னவற்றைச் சொல்வானாயின் அவன் ரௌரவ நரகத்தை யடைவான். தமக்குச் சித்தப் பிரமை வந்திருக்கிறது.

மச்சான்—நீ மனிதரில் ஒரு பதர்: உன்னைப் பொருளா யெண்ணிப் பேசுதல் எனக்கு அவமானம். இவள் தன் பதிக்குத் துரோகஞ் செய்தவள். இம்மட்டா, நிருபனுடன் சேர்ந்து என்னைக் கொலைபுரிய எண்ணினவள். இவளுடைந்தை யிலலாமல் சுசீலனும் நிருபனும் தப்பி ஓடினரில்லை.

தாந்தி—கடவுளறியச் சொல்லுகிறேன். நிருபன் செய்தகாரியம் இன்னதென்றே நானறியேன். தாம் வாஸ்தவத்தை யறியாமற் கோபங்கொள்ளுகிறீர். என்மேல் வீண் அபவாதங்களை யெல்லாஞ் சொல்லுகின்றீர். உண்மையைத் தெரிந்து கொண்டபிறகு எனக்கு வந்த நஷ்டத்திற்கு உத்திரவாதம் செய்யத் தம்மாலாகாதென்பதை உறுதியாய்க்கொள்ளவேண்டும்.

மச்சான்—உலைவைத்த சந்திலே சாறுகாய்ச்சும்பெண்கள்பேச்சை நம்பலாகாது. இவளைச் சிறைச்சாலையி லடையுங்கள். இவள் கக்ஷியிற் பேசுகிறவர்களும் குற்றவாளிகளே.

தாந்தி—எனக்கு ஏழரைநாட்டுச்சனி பிடித்திருக்கிறது. அது மாறுகிறவரையில் நான் துன்பப்படத்தான் வேண்டும். பிரபுக்களே, நீங்கள் பெண்கள் பிள்ளைகளை யுடையீர்; தருமசிந்தை கொஞ்சமேனும் உங்களிடத்திலிருக்கும். மகாராஜா சொல்வதைக்கேட்டு என்னைவித்தியாசமாக எண்ணமாட்டீர்களென்று நம்புகிறேன். அரசன் சித்தப்படியே நடத்துங்கள்.

மச்சான்—நான் சொன்னபடி கேட்பீர்களா இல்லையா?

**சாந்தி**—நாதா, நான் தனியே சிறைச்சாலைக்குப் போகவேண்டுமா, என் சேடிகளும் வரலாமா? இந்தக்காலம் நான் ஒண்டியா யிருக்கக் கூடியதன்று [சேடிகளை நோக்கி] பெண்காள், ஏன் கண்ணீர் விடுகிறீர்கள்? நான் பாபியென்பது ஸ்தாபிக் கப்பட்டால் அப்போது நீங்கள் அழுவது தகுதி. இப்போது நான் காராகிரகத்திற்குச் செல்வதினுல் எனக்குட் புகழ் அதி கரிக்கும். நாதா, தங்கள் மனம் நோகும்படியாய் என்றும் நான் நடந்திலேன். எனக்கு விடை தந்தருளும். சேடிமாரே என்னுடன் வாருங்கள். அரசன் அனுமதி அளித்துவிட்டார்.

**மச்சரன்**—என் எதிரில் நிற்காமற் போங்கள்.

[சாந்தியும் சேடிமாரும் போய்விடுகிறார்கள்.]

**முதல் பிரபு**—மஹாராஜாவே, தமது பட்ட மஹிஷியைத் திரும்பி அழையுங்கள்.

**கலியன்**—அரசே, நீர் செய்யுங் காரியத்தைத் தீர்க்காலோசனை பண்ணிச் செய்தல்வேண்டும். உம்முடை நியாயம் அநியாய மாய் முடியும்; அதனுல் நீரும், உமது மனைவியும், புத்திர னும் கேட்டை அடையும்படி நேரிடும்.

**முதல் பிரபு**—மஹாராஜாவே—மஹாராணியாரிடத்தில் குற்றமிரு ந்தால் என் பிராணனைக் கொடுக்கிறேன். அவள் நிரபராதி யென்று கடவுளின்மேல் ஆணையிட்டுச் சொல்லத் துணிகி றேன்.

**கலியன்**—சாந்தியிடத்தில் தவறுதலிருக்குமாயின், உலகத்தி லுள்ள ஸ்திரீகள் ஒருவரும் நல்லவரே இல்லையெனலாம்.

**மச்சரன்**—உங்கள் வாயைத் திறக்கலாகாது.

**முதல் பிரபு**—உங்கள் க்ஷேமத்தைக் கருதி பேசுகின்றோமே யல் லாமல் எங்கள் காரியம் ஒன்றும் கெட்டுப்போகவில்லை.

**மச்சரன்**—பேசாதே. நீ சாக்கடையிற் புழுத்த புழுவாயிருக்கின் றமையால் நாற்றத்தை யுணரமாட்டாய். எனக்குக் கொஞ்ச நாற்றமுந் தாளமுடியாது.

**கலியன்**—நேர்மை என்பது உலகத்தில் இறந்துபொயிற்றென்ன லாம்.

**மச்சரன்**—என் வாக்கில் உங்களுக்கு நம்பிக்கையில்லாமற் போயிற்று ?

**முதல் பிர**—பட்டமகிஷிமேற் பழி சொல்பவர் பேச்சில் நாங்கள் நம்பிக்கை வைக்காவிடின் தோஷம் ஒன்றுமில்லை.

**மச்சரன்**—நாம் இஷ்டப்படி எதையுஞ் செய்யலாம் என்பதை நீங்கள் முற்றிலும் மறந்தீர்கள். உங்களைப்போல் மதியிழந்தவர்களை யோசனைகேட்பதில் நயமென்ன ? லாபநஷ்டங்கள் எமதாயிருக்க உங்களைக் கேட்டுச் செய்யவேண்டிய தொன்றுமில்லை.

**கலியன்**—தாம் தனித்து யோசனைசெய்தால் வாஸ்தவம் தமக்குப் புலப்படாமற் போகாது.

**மச்சரன்**—முதுமையால் உனக்கு மூளை மழுங்கிப் போயிருத்தல் வேண்டும் ; அன்றேல், பிறந்தது முதலே உனக்குப் புத்தி இல்லாமலிருந்திருத்தல் வேண்டும். நிருபன் நாட்டைத் துறந்து ஓடினதும் சாந்தியும் சுசீலனும் குலாவிக்கொண்டாடிக் கொண்டிருந்ததைக் கண்டவன் சாந்தி விபசாரி என்று கூறினன். வெளித்தோற்றத்தையேமுற்றிலும் நம்புதல் ஒழுங்கல்லவென் றெண்ணிக் குலதேவதைக்குப் பூஜை செய்வித்து அந்தத் தேவதையின் கருத்தென்ன வென்றறிந்துவரும்படி தவன், நியமன், இருவரையும் அனுப்பி யிருக்கிறேன். அவ்விருவரும் புத்திமான்களல்லவா ? தெய்வ ஸம்மதத்தையும் அறிந்து அதற்கொத்தவாறு நடப்போம்.

**முதல் பிர**—தாஞ்செய்த காரியத்தில் பிழைசொல்ல யாரால் முடியும்?

**மச்சரன்**—நம்முடைய அபிப்பிராயம். சரியென்பதிற் சந்தேகமில்லாவிடினும் நம்பிக்கை இல்லாதவருக்குத் தெய்வசாக்ஷியமும் ஏற்படுதல் நலந்தானே. நிருபனும் சுசீலனும் நம்மைக்கொன்று அரசையடைய எண்ணினபடி நடவாமற் போனாலும் சாந்தி அவ்விருவருக்கும் உடந்தையாயிருந்து நம்மைக்கொலை செய்யாமலிருத்தலுக்கே அவளைச்சிறைப்படுத்தினோம்.

# இரண்டாமங்கம்.

## இரண்டாங்களம்.

---

*சிறைச்சாலையின் வெளிப்புறத்தறை.*

**கலியன்**—[தனக்குள்ளே] ஊரார்நகைக்க இதுவும் ஒருவழிதான்.

**பிரவேசம்**—புனிதை [கலியன் மனைவி] யும் அவள் சேடிமாரும்.

**புனிதை**—(சேடியை நோக்கி), காவற்கூடத்தின் விசாரிப்புக்காரரைக் கூவி நான் வந்திருப்பதாகச்சொல். [சேடி போய்விடுகிறள்] [தார்த்தியை நினைத்து] பூலோகத்திலுள்ள ஸாமான்ய மனிதருக்கு வாழ்க்கைபடத் தகாத நீ சிறைச்சாலையி லடைபட்டிருக்கிறாயே, இந்த அநியாயம் அடுக்குமா?

[விசாரிப்புக்காரர் பிரவேசம்.]

ஐயா, தாம் என்னை அறிவீரே.

**விசா**—பூஜிக்கத்தக்க உத்தமியென்று உண்மை அறிவேன்.

**புனிதை**—என்னை அரசி இருக்குமிடம் அழைத்துப் போவீராக.

**விசா**—ஒருவரையும் அரசியண்டை அழைத்துப்போத லாகாதென்று ராஜகட்டளை பிறந்திருக்கிறது, அம்மணி.

**புனிதை**—சிறைப்பட்ட நேர்மையைப் பார்த்தலாகாதோ? அரசியின் சேடிமாரில் ஒருத்தியாகிய மைத்ரீயைப் பார்த்துப் பேசலாமோ?

**விசா**—தமது சேடிமாரை அப்புறம் போகச்சொன்னல் மைத்ரீயைத் தம்மிடம் அழைத்து வருவேன்.

**புனிதை**—சேடிமாரே, அப்புறஞ் செல்லுங்கள் மைத்ரீயைத் தருவியுங்கள்.

**விசா**—அரசியுந் தாமும் பேசுங்காலத்தில் நானுங்கூட இருத்தல் வேண்டும்.

**புனிதை**—தமது இஷ்டப்படியே ஆகட்டும். மாசில்லா மணியைக் கறைப்படுத்தல் கஷ்டமாய்த்தானிருக்கிறது.

[மைத்ரீயை நோக்கி]

மைத்ரீ, நமது அரசி சவுக்கியமா?

மைத்ரீ—அசுடகிரஹங்களாற் பீடிக்கப்பட்ட பெரியோர் எத்துணை சுகமாயிருத்தலாகுமோ, அத்துணை சுகமாய்த்தான் அரசி இருக்கின்றாள். அரசிக்குவந்த துக்கத்தினாலும், அச்சத்தினாலும் நிறைந்தமாதம் வருவதற்கு முன்னமேயே பிரஸவித்துப்போட்டாள்.

புனிதை—பிறந்தது பிள்ளையா?

மைத்ரீ—பெண் பிறந்திருக்கின்றது; புஷ்டியாயிருத்தலினால் தீர்க்காயுளுள்ளதாக விருக்கும்போலிருக்கிறது. குழந்தையைப் பார்த்ததினால் அரசி மிகுந்த ஆறுதலடைந்து "நீ நிரபராதியாயிருத்தல் போலவே நானும் ஒரு பாவத்தை யறியேனாயினும் இரண்டு பேரும் சிறையிலிருக்கக் கடவுள் நியமித்துவிட்டார்—என்னே" என்று அடிக்கடி புலம்புவாள்.

புனிதை—ஓகோ, நமது அரசன் இவ்வாறு மதியிழந்து வெறியர் போற்செய்யத் துணிந்தாரே! அவர் புத்தியைச் சரியான வழியில் திருப்புவது ஸ்திரீகளுக்கே சாத்தியம். நான் அவரிடம் போய்க்கடுஞ்சொல் சொல்லாவிடின் என் நாக்கு அழுகிப்போகட்டும். ராஜஸந்நிதியில் என்முகத்திலிருந்து நெருப்புப்பொறிபறக்கச் செய்கின்றேன். இது நிற்க; மைத்ரீ—நீ அரசியிடத்திற் சென்று பிறந்திருக்கும் சிறுமியை அரசன் பார்வைக்கு நான் எடுத்துப்போக அனுமதி பெறல்வேண்டும். நானே அரசனிடத்தில் வாதாடுகின்றேன். சிசுவைக்காணின் அரசன் மனம் இளகாதா? பிரஹ்மம் போன்ற சிசு பேசாவிடினும் அதன் பக்ஷத்தில் கடவுள் இருப்பார்.

மைத்ரீ—உம்மைவிட இவ்வுயர்ந்த தர்மத்தை நிறைவேற்றக் கூடியவர் ஒருவருமில்லை. சற்று அடுத்த அறையில் உட்கார்ந்திருக்க. நான் அரசியிடத்தில் உமது கருத்தை விக்ஞாபனஞ் செய்கிறேன்.

புனிதை—எனக்குத் தெரிந்தமட்டில் அரசனிடத்தில் பேசுவேன். என்மனம் தைரியமாக இருக்கிறதுபோல என் வாக்கினின்றும் உசிதமான பேச்சுக்கள் பிறத்தல் வேண்டும். என் [illegible] வீண்போகாதென்று எண்ணுகிறேன்.

மைத்ரீ—கடவுள் உம்மைக் காப்பாராக.

விசா--குழந்தையைச் சிறைச்சாலைக்கு வெளிப்புறத்தில் எடுத்துப் போகச் சட்டம் இடங்கொடாதென்று நினைக்கிறேன்.

புனிதை—அதைப்பற்றி நீர் பயப்படவேண்டாம். இக்குழந்தை கருப்பையாகிய சிறையிலிருந்தது. அதினின்றும் இயற்கையாய்ச் சுவேச்சையடைந்திருக்கிறது. எந்தக்குற்றத்திற்கும் அதைச் சிறையில் வைக்க அரசனுக்கு அதிகாரங்கிடையாது.

விசா---நீர் சொல்லுகிற நியாயமே என்புத்திக்கும் ஒத்திருக்கிறது.

புனிதை—தாம் அச்சப்பட வேண்டுவதில்லை. தங்களுக்காக என் தலையைக்கொடுக்கத் தயாராயிருக்கிறேன்.

---

# இரண்டாமங்கம்.

## மூன்றுங்களம்,

---

### மச்சரன் அரண்மனை

பிரவேசம்—மச்சரன், கலியன், பிரபுக்கள், சேவகர்கள்.

மச்சரன்—ஸதாகாலமும் என் மனத்திற்குச் சாந்தமில்லாமற் போயிற்று. இந்த நிலைமை மனோதிடமில்லாமையால் வந்தது. தூர்த்தையாகிய சாந்தியாலும் அவள் சோரபுருஷன் சுசீலனாலும் எனக்கு இந்த மனோவியாதி பிடித்திருக்கிறது. பாவி சுசீலன் என்கையி லகப்படாம லோடிவிட்டான். என்வசத்திலகப்பட்ட சாந்தியைப் படுத்தாத பாட்டைப் படுத்திப் பழி வாங்குவேன். அப்படிச் செய்தாலெனக்கு நித்திரைவரும், யாரடா,சேவகன் இருக்கிறான் ?

முதல் சே.—மஹாராஜாவே, தங்கள் சித்தமென்ன ?

மச்சரன்—நமது குமாரன் பூரணனுக்கு உடம்பு சவுக்கியமாயிருக்கிறதா ?

மு. சே.—நேற்றிரவு நன்றாய்த் தூங்கினார்: வியாதி தெறித்துப் போயிற்றென்னலாம்.

**மச்சரன்**—விளையும் பயிர் முளையிலே என்பதைப் பூரணன் காட்டுகிறான். அவன் பெருந்தகைமையை என்னென்று சொல்வேன்? தனது தாயின் முறைபுரண்ட நடவடிக்கையைக் கேட்டவுடனே நோய்கொண்டு ஊணுறக்கமற்றுந் தவிக்கின்றானே. பிராணனைவிட மானம் பெரிதென்று சிறுபிள்ளைகளுந் தெரிந்துகொள்ளுகிறார்கள். மானத்தைவிட்டு குலத்தைக் கெடுக்கவந்த என்மனைவி சாந்தியினாலல்லவோ என் அருமை மகன் துன்பமடைகிறான். சேவகா குழந்தையை ஜாக்கிரதையாய்ப் பார்த்துக்கொள்: நீ போகலாம். [தனக்குள்ளே] பிள்ளையை நினைத்துப் பரிதபித்தலுக்கு இது ஸமயமன்று. அவன் தாயைச் சித்திரவதை செய்தல் வேண்டும். நிருபனும் சுசீலனும் என்னைப்பார்த்து நகைத்துக் கொண்டிருக்கிறார்கள். நண்டுக்குப் பிராணாவஸ்தை நரிக்குக் கொண்டாட்டமாயிருக்கிறது. அவ்விருவரும் என் கையிலகப்படாமல் என் ஆத்திரத்தைப் பூர்த்தியாய் ஆற்றிக்கொள்வேன். கையிலகப்பட்டவளைச் சும்மா விடேன்.

**பிரவேசம்**—[புனிதை தன் கையில் சாந்தியின் பெண்குழந்தையை எடுத்துக்கொண்டு.]

**முதல் பிரபு**—ராஜஸபைக்கு நீ போகக்கூடாது. [புனிதையை நோக்கி.]

**புனிதை**—அரசன் கோபத்தைவிட உங்கள் கோபம் பெரிதாயிருக்கிறதே, இதென்ன பாவம்! என்பக்ஷத்தில் நீங்கள் பேசுவீர்களென்றல்லவோ வந்தேன். அரசனைப்பார்த்தல் கூடாதென்பீராயின், இராணியின் உயிருக்குச் சேதம் வரும். இராணியிலும் நிரபராதிகள் உலகிலிருக்கின்றார்களோ?

**கலியன்**—போதும் போதும், உன் வாயை அடக்கு.

**மு-பி**—நேற்றிரவு முழுதிலும் நமதரசன் நித்திரை செய்யாமையால் தன்னை ஒருவரும் பார்க்க வரக்கூடாதென்று கட்டளை பிறப்பித்திருக்கின்றார்.

**புனிதை**—கோபங்கொள்ளாதீர். நமது மஹாராஜாவின் மனம் சாந்தத்தையடைந்து நல்ல நித்திரை பெறுவதற்கு உபாயம் செய்ய வந்தேன். இதனை நீர் அறிதல் வேண்டும்.

மச்சான்—என்னடா, அங்குக் கூக்குரல் செய்கிறாய்?

புனிதை—மஹாராஜாவே, கூக்குர லொன்றுமில்லை. தமது மனம் ஆறுதலையடைய உபாயங்கள் எவையென்று விசாரித்துக்கொண்டிருந்தோம்: க்ஷமிக்கவேண்டும்.

மச்சான்—கலியா, இந்தப் பெண்பிள்ளையை, நம்முன் வர விடாதே; அவள் இங்கு வந்து என்னை வருத்துவாளென்று எனக்குத் தெரியும்.

கலியன்—தமது ஸந்நிதிக்கு வந்தால் தலைபோகுமென்று நான் முன்னதாகவே எச்சரித்திருந்தும் அவள் வந்துவிட்டாள். நான் செய்யக் கூடியதென்ன?

மச்சான்—மனைவியை அடக்கி ஆளமுடியாத நீ ஆண்பிள்ளையோ?

புனிதை—என்னைத் துர்மார்க்கத்தில் பிரவேசியாமல் அடக்கி ஆள என் கணவன் அறிவார். நான் இச்சமயம் பிரவேசித்திருக்கிற மானரக்ஷண காரியத்திலிருந்து என்னை விலக்க அவராலுமாகாது, அவர் பிதிருக்களாலுமாகாது.

கலியன்—இவள் கடிவாளம் போடாத குதிரைபோல் ஓடுவாள். ஆயினும் இடறி விழமாட்டாள்.

புனிதை—ராஜகம்பீரரே, நான் தமது அடிமைக்காரி, தமக்குச் சிகித்ஸைசெய்யும் வைத்தியன்; தமக்குண்டாயிருக்கும்மனக் கலக்கத்தை மாற்றி ஆறுதல்செய்ய வந்துளேன். தமது உத்தம பத்தினி சாந்தியாரின் தூதாக வந்திருக்கிறேன்.

மச்சான்—உத்தம பத்தினி யென்று சொன்னவாயை நீ கழுவுதல் வேண்டும்.

புனிதை—பதினாயிரமுறை உத்தம பத்தினியென்பேன்: மறுத்தவரோடு போர்புரிந்து வெல்லத் துணிந்திருக்கிறேன்.

மச்சான்—இவளை வெட்டி வெளியில் தள்ளுங்கள்.

புனிதை—என்மேற் கைபோடுகிறவன் கண்களைப்பிடுங்கிப்போடுவேன். சாந்தி உத்தம பத்தினி யென்பதில் ஐயலேசமும் இடையாது. நான்வந்த காரியத்தைச்செய்யாமல் இங்கிருந்து போதல் தூதிக்குத் தருமமல்ல. ராஜமார்த்தாண்டா,

உமது உத்தம பத்தினியின் அருங்குமாரி இக்குழந்தை. உமதுஆசிர்வாதத்தைப்பெறுதற்கு அனுப்பப்பட்டிருக்கிறது. [அரசன் பாதத்தண்டை சிசுவை வைத்துக்கொண்டு]

**மச்சான்**—இந்தத் துன்மார்க்கியை வெளியிற் கொண்டுபோய்த் தள்ளு; இவள் தொழில் இழிதொழில்.

**புனிதை**—நான் இழிதொழிலைக் கனவிலுங் கண்டிலேன். பித்துப் பிடித்துப் பிதற்றுகின்றீர். பித்தர்களை உலகிேனோர் சாதுக்க ளென்றுதான் சொல்வார்கள்.

**மச்சான்**—துரோகிகளா, இந்தத் தூர்த்தையை வெளியில் தள்ள மாட்டீர்களா, வேசிபெற்ற பெண்ணை இவளிடத்திலேயே கொடுத்தனுப்புங்கள். [கலியனை நோக்கி] புருஷனென்று சொல்லிக்கொண்டு வெளியில்வர நீ வெட்கப்படவில்லையா, வேசையின் குழந்தையை உன் மனைவியாகிய பசாசின் கை யிற் கொடுத்து வெளியில் துரத்து.

**புனிதை**—அருந்ததி வயிற்றிற் பிறந்த இந்த அரும்பாலனைக் கை யினால் நீர் தொட்டால், உமது கை, கடவுளால் சபிக்கப்படு மென்றஞ்சும்.

**மச்சான்**—பெண்டாட்டியைக் கண்டஞ்சும் பேதையா யிருக்கின் றானே கலியன்! இதுதான் கலிகாலம்!

**புனிதை**—உம்முடைய பத்தினியிடத்தில் உமக்குஅச்சமிருந்தால் உமக்குப்பிறந்த குழந்தையை உம்மதென்று அங்கீகரியாமற் போவீரா?

**மச்சான்**—ஒரு கூடைகல்லும் பிடாரிகளா? என் ஆணைமீறி நடக்க எல்லாருந் துணிகின்றார்களே?

**கலியன்**—சூரியபகவானறியச் சொல்லுகிறேன்—நானுமக்குத் துரோகம் நினைத்தவனன்று.

**புனிதை**—என் பர்த்தா எப்படிச் சொன்னாரோ அப்படித்தான் நானும் இருக்கிறேன். மனைவி மக்களுக்கு விளையும் மான நஷ்டத்தை மதியாது தமக்கே துரோகியாயிருப்பவர் இந்தச்

சபையில் ஒருவர் தாம், தாம் கொண்ட தாபிப்பிராயத்தைக் குரங்குப்பிடியாய்ப் பிடித்துக் கொண்டிருக்கிறீர். நாம் செய்யக்கூடியதென்ன ?

**மச்சான்**—இந்த வாய்ப்பட்டி தன் புருஷனைப் பலமுறை அடித்துமிருப்பாள். இங்கு கிடக்கும் சிசு எனக்குப் பிறந்ததன்று; இதன் பிதா சுசீலன். இதையும் இதன் ஆத்தாளையும் அக்கினிக்கு இரையாக்குங்கள்.

**புனிதை**—இந்தக் குழந்தை உமக்குப் பிறந்ததென்பதில் எள்ளளவேனும் ஸந்தேகமில்லை. சபையோரே, குழந்தையினுடைய ஒவ்வொரு அவயவத்தையும் உற்றுப்பாருங்கள். ஆபாதமஸ்தகம் நமது மகாராஜாவைப்போலவே இருக்கிறதென்று அறிந்து கொள்ளவில்லையா? கண்கெட்ட குருடனும் ஒப்புக்கொள்வானே.

**மச்சான்**—எ துஷ்டை, நீ இனிவாயைத் திறந்தால் உன் தலையை வெட்டிவிடுவேன்.

**புனிதை**—பெண்வாயை அடக்கமுடியாத புருஷர்களை யெல்லாம் சிரஸாக்கினை செய்துவிடுவீராயின், நீர் ஒருவர்தாம் மிகுந்திருக்கலாம். உமது ராஜ்யத்தில் பிரஜைகளற்றுப்போவார்கள்.

**மச்சான்**—இன்னொருமுறை சொல்லுகிறேன், அந்தத் துஷ்டையை அப்புறப்படுத்துங்கள்.

**புனிதை**—இதுகாறுஞ் செங்கோலனென்று புகழ்பெற்ற தாம் இந்த ஸமயங்கொடுங்கோலனானது ஒரு புதுமையாய்த்தானிருக்கிறது. உத்தமியிடத்திலும் அவள் குழந்தையிடத்திலும் கொடுமை செய்வீராயின் உலக அபவாதத்திற்குள்ளாவீரென்பதை அறியவேண்டும். நமது வேதத்தில், "குன்றினனையாருங் குன்றுவர் குன்றுவ குன்றி யனைய செயின்" என்று கூறப்பட்டுள்ளது. மேலும் "மேலிருந்து மேலல்லார் மேலல்லர் கீழிருந்துங் கீழல்லார் கீழல்லர்" என்றுமிருக்கிறது. என் வார்த்தை பெண்வார்த்தையென்று உதாசினித்தலாகாது. "பேதைமையுளெல்லாம் பேதைமை காதன்மை கையல்ல தன்கட் செயல்."

**மச்சரன்**—நம்மைப் பார்த்துக் கொடுங்கோலனென்று சொல்லத்

துணிந்த பேதையின் தலையைத் துணித்தெறியக் காலம் பிடிக்குமோ? இவளைத் தள்ளுங்கள்.

புனிதை—என்மேற் கைபோடாதீர். நானே போய்விடுகிறேன். கருணாநிதியாகிய அரசரே, உமக்குக் கடவுள் அளித்த இவ்வரும் பெண்ணைக் காத்தருளும். [சேவகர்களை நோக்கி] நீங்கள் இச்சகம் பாடிகள். "தெரிதலுந் தேர்ந்து செயலுமொருதலையாய்ச் சொல்லும் வல்ல தமைச்சு" என்பதை அறியீர்போலும்.

[புனிதை போய்விடுகிறாள்.]

மச்சான்—கலியா, நீ உன் மனைவியைத் தூண்டிவிட்டு ஒன்றுந் தெரியாதவன்போல் நடிக்கின்றாய். உன் கவட்டை யானறிவேன். இப்போது உனக்கு இடுங்கட்டளையாவது—இந்தச் சிசுவை எடுத்துப்போய் நெருப்பிலிட்டு நமக்கு மறுமொழி வந்துசொல். நீ அப்படிச் செய்யாவிடின் உன் உடல் பொருள் ஆவி மூன்றையும் நான் கவர்ந்துகொண்டு இச்சிசுவை என் கைகளினாலேயே கொலைபுரிவேன். எடுத்துப்போ; உன் மனைவியை என்னிடத்தில் தூண்டிவிட்டுக் கேளிக்கை பார்க்கின்றாயா?

கலியன்—மகாராஜாவே, என் பெண்சாதியை நான் இங்கு வரச் சொன்னதேயில்லை. தமக்குச் சந்தேகமிருந்தால் இங்குள்ள மற்ற கனவான்களைக் கேட்கலாகும்.

முதல் பிரபு—கலியன் சொல்வது உண்மையென்று சத்தியஞ் செய்கிறோம்.

மச்சான்—நீங்களனைவரும் பொய்யர்கள்.

முதல் பிரபு—தாம் எங்களைப்பார்த்து வசை கூறுவது தர்மமல்ல தங்கள் ஊழியத்தில் எங்கள் ஆயுளைச் செலவிட்டிருக்கின்றோம். இனியும் தங்களுக்கு க்ஷேமம் உண்டாகவேண்டுமாயின் இக்குழந்தைவிஷயமாய்த் தாங்கள் கொண்டிருக்குங் கொள்கையை மாற்றல் வேண்டும். தங்களுக்கு நமஸ்காரஞ் செய்து கெஞ்சுகின்றோம்; மனம் இரங்குவீராக.

மச்சான்—என்னை எடுப்பார் கைப்பிள்ளையாக்கப் பார்க்கின்றீர்.

இந்த வேசைமகள் என்னை "அப்பா" வென்று கூப்பிடும் வரையில் நான் உயிரை வைத்திருக்கவேண்டுமோ? இப்பொழுதே இதை அழித்துவிடுதல் நலமாயிற்றே. ஆயினும் இதனை நாம் கொல்லவேண்டாம். [கலியனை நோக்கி] நீயும் உன் பெண்டாட்டியும் இந்த வேசைமகளுக்குப்பரிந்து பேசினீர்களே. இதனுயிரைக் காபாற்ற நீ என்ன செய்வாய்?

**கலியன்**—என் உயிரைக் கொடுத்தாவது குழந்தையின் உயிரைக் காப்பேன். தாம் வேறெதைச் செய்யச்சொன்னாலும் செய்யத் தயாராயிருக்கின்றேன்.

**மச்சரன்**—இந்த வாளின்மேலாணையிட்டு நான் சொல்லுகிறபடி செய்வதாக உறுதியாய்ச்சொல்.

**கலியன்**—பிரமாணம் செய்கின்றேன், பிரபுவே.

**மச்சரன்**—ஆணைமீறி நடப்பாயானால் உன்தலையையும் உன் வாயாடுதலான மனைவியின் தலையையும் சேதிக்து விடுவேன். இந்தச்சிசுவை வேறு நாட்டிற் கெடுத்துப்போய்க் காட்டில் விட்டுத் தெய்வச்செயலால் பிழைக்கவாவது இறக்கவாவதுசெய்.

**கலியன்**—[சிசுவைக் கையிலெடுத்துக்கொண்டு] தாம் சொல்லுமாறு செய்தலினும் இப்பொழுதே இந்தக் குழந்தையைக் கொலைசெய்துவிடல் நலமாயிற்றே. ஐயோ, குழந்தாய், உன் விதி இவ்வாறாக அமைந்ததா! கருப்பைக்குள் முட்டைக்கும் கல்லினுட்டேரைக்கும் விருப்பமொடு அமுதளிக்கும் எம்பிரான் உன்னைக் காப்பாராக. மகாராஜாவே! இந்தக் கொடுமைக்குத் தக்க தீங்கு உமக்கு நேராமலிருக்கட்டும்.

"முடிசார்ந்த மன்னரு மற்று முள்ளோரு முடிவிலொரு
பிடிசாம்பராய் வெந்து மண்ணாவதுங் கண்டு பின்னுமிந்தப்
படிசார்ந்த வாழ்வை நினைப்பதல்லாற் பொன்னி னம்பலவ
ரடிசார்ந்து நாமுய்ய வேண்டுமென்றே யறிவாரில்லையே"

என்று துக்கிக்கிறேன்.

**மச்சான்**—வேறொருவனுக்குப் பிறந்த பிள்ளையை நான் வளர்க்க மாட்டேனென்றறி.

**முதற் சேவகன்**—பிரபுவே, குலதேவதையினாலயத்திற்குத் தாமனுப்பிய தவன், நியமன் இருவரும் தேவருடைய கருத்தையறிந்து வந்திருக்கின்றார்கள்.

**முதற் பிரபு**—அவ்விருவரும் யாத்திரையை முடித்து வந்தது வெகு சீக்கிரமல்லவா ?

**மச்சான்**—யாத்திரை இருபத்துமூன்று நாட்களில் முடிந்துவிட்டது. நமது குலதேவதையும் காலஹரணஞ் செய்யவில்லை. தாந்தி விசுவாஸ காதகியென்று சொன்னோம். அவளை நியாயஸ்தலத்தில் கொணர்ந்து விசாரணை செய்து தக்க தண்டனை பெறும்படிச் செய்வோம். அவள் உயிரோடிருக்கும்வரையில் எனக்குத் தூக்கம் வராது. நியாய விசாரணைக் கர்த்தர்களை ஒரு சபை கூட்டுங்கள். தேவ ஸங்கல்பமும் மனித ஸங்கல்பமும் எவ்வாறிருக்குமென்றறிவோம். நீங்கள் விடைபெற்றுப் போகலாம். ஆக்ஞையை நிறைவேற்றப் பாருங்கள்.

---

# மூன்றாமங்கம்.

## முதற்களம்.

### சேதிநாட்டிலொருநகரம்.

பிரவேசம்—நியமனும், தவனும்.

**நியமன்**—மித்ரா, நாமிருவரும் பார்த்த ஸ்தலம் எத்துணை ரமணீயமாயிருந்தது. அங்குள்ள காற்றை யுட்கொண்டு ஆயிரம் வருஷம் ஜீவித்திருக்கலாம்; ஆலயத்தி னழகை எடுத்துச் சொல்ல ஆதிசேஷனாலுமாகாது.

**தவன்**—என் மனத்திற் பட்டவற்றைச் சொல்கின்றேன். தேவனுக்கு ஆராதனை செய்பவர்களுடைய ஆசாரம், பக்தி, சிரத்தை, கருணை முதலான உத்தமகுணங்கள் என் மனத்திற் பதிந்தன. அவற்றை எடுத்துப் பேசுவதிற்றான் எனக்குப் பிரியம். பூஜை நடக்குங்காலத்தில் எனக்கு மயிர்க்கூச் சறைந்தது. என் மனம் கடவுளிடத்திலேயே குவிந்து நின்றது. தேவஸந்நிதியின் பெருமையை நாம் சொல்ல வல்லோமில்லை.

**நியமன்**—எல்லாவற்றையும்விட நமக்கு அச்சமுண்டாக்கினது, தீபாராதனை காலத்தில் உண்டான அசரீரி வாக்கின்தொனியன்றோ? இடிமுழக்கம்போல் பூமி கிடுகிடுக்கவில்லையா? தேவதையே ஸ்வர்க்கத்திலிருந்து கீழிறங்கி வந்ததுபோலிருந்தது. என்னுடல் நடுநடுங்கிற்று.

**தவன்**—நமது அரசிக்கு அனுகூலமான உத்தரம் கடவுள் அளித்திருப்பாரென்று நம்புகிறேன். நமது யாத்திரை எவ்வளவு மனவெழுச்சியை யுண்டாக்கிற்றோ அவ்வாறே தேவானுக்கிரகமு முண்டாதல் வேண்டும்.

**நியமன்**—தெய்வஸங்கல்பம் ஒருநாளும் தப்புவழியிற் செல்லாது. நமது அரசியின்மேல் அபவாதஞ் சொல்லுகிறவர்கள் பாவிகள்.

**தவன்**—தேவன் கருத்தமைந்த பத்திரம் முத்திரையிட்டு நம்மிடத்தில் குருக்கள் தந்திருக்கின்றார். ராஜஸந்நிதியில் திறந்து வாசித்து விட்டால் கஷ்டநிவர்த்தி யுண்டாகும். எல்லாம் ஈசன் செயல்.

---

# மூன்றுமங்கம்.

## இரண்டாங்களம்.

### நியாயஸ்தலம்

**பிரவேசம்**—மச்சரன், பிரபுக்கள், உத்யோகஸ்தர்கள்.

**மச்சரன்**—இப்போழ்து நியாயஸபை கூட்டியிருப்பதற்குக் காரணங்களை உங்களுக்குச் சொல்லுகின்றேன். பாமரஜனங்கள் என்னைக் கொடுங்கோலனென்று நிந்திக்கிறார்கள். லோகாபவாதத்திற்குப் பயப்படுகிறேன். நியாயாதிபதிகள் இருதிறத்தாருடைய வாக்கு மூலங்களைக் கேட்டு தீர்ப்புச் செய்துவிட்டால் என்மேற்பழி நீங்குமென்றெண்ணித்தான் இச்சபை கூட்டியிருக்கிறேன். தாந்தி ராஜபுத்திரி: எனக்கு வாழ்க்கைப்பட்டு என்னால் வெகுகாலம் அன்புடன் ஆதரிக்கப்பட்டவள். நியாயாதிபதிகள் பார்த்து அவளைக் குற்றவாளியென்றோ நிரபராதியென்றோ சொல்லட்டும். அந்தப் பாரத்தை நியாயாதிபதிகள்மேற் போட்டுவிட்டேன். குற்றஞ் சாட்டப்பட்ட தாந்தியை நியாயஸ்தலத்திற்குத்தருவியுங்கள்.

**சேவகன்**—அரசி நியாயஸ்தலத்தில் ஆஜராக வேண்டுமென்று ராஜாவின் ஆக்ஞை பிறந்திருக்கிறது. ஸத்து!

[**பிரவேசம்**—சேவகர்களாற் காக்கப்பட்ட தாந்தி, புனிதை, சேடிமார்.]

**மச்சரன்**—குற்றப்பத்திரிகையைப் படித்துக்காட்டுங்கள். (குமாஸ்தா வாசித்தது).

நமது காருண்ய மஹாராஜாவினுடைய பத்தினியாகிய தாந்தி சுசீலனோடு சம்பந்தப்பட்டிருப்பதாலும், மேற்சொன்ன சுசீல அரசனோடும் நிருபன் என்னும் மந்திரியோடுங் கலந்து நமது மஹாராஜாவைக்கொலைசெய்யச் சதியோசனைசெய்ததாலும் இராஜத்துரோகக்குற்றத்தைச் செய்தவளாகிறாள். சுசீலனும் நிருபனும் தண்டனைக்குள்ளாகாமலிருக்கும்பொருட்டு அவ்விருவரும் கள்ளத்தனமாய் ராஜ்யத்திலிருந்து தப்பி ஓடும்படி ஒத்தாசை செய்த உடந்தைக்குற்றத்தையும் மேற்சொன்ன தாந்தி செய்தவள். இவ்விரண்டு குற்றங்களையும் செய்த தாந்தி இந்த ஸ்தலத்தில் தனக்குள்ள வாதங்களைச் சொல்ல வேண்டியது.

**தாந்தி**—தருமத்தை நிலைநிறுத்தும் நீதிபர்களே-படிக்கப் பெற்ற குற்றபத்திரிகையைக் கேட்டேன். அதற்குப் பிரதியுத்தரஞ் சொல்ல என்னாலாகாது. தாம் உண்டென்று சொல்வதை நான் இல்லையென்று கூறுவதைத் தவிர்த்து எனக்கு வேறு உத்தரங்கிடையாது. தாமும் அதை நம்பமாட்டீர்கள். எனக்குச் சாக்ஷி ஸர்வவியாபியான கடவுளே. "வஞ்சித்த எங்குமுளனொருவன் காணுங்கொல்;" "கழிமுடைப் புன்புலானாற்றம் புறம்பொதிந்து மூடினுஞ் சென்றுதைக்குஞ் சேயார் முகத்து." நான் உங்கள் பத்திரிகையிற் கூறியவாறு குற்றஞ் செய்தவளாயின் கடவுள் என்னைத் தண்டிப்பார். நிரபராதியாயிருந்தேனாயின் அவரே என்னைக்காப்பார். நான் அஞ்சவேண்டிய அம்சம் ஒன்றுமில்லை. என்மேற் சாட்டியிருக்குங்குற்றங்களிரண்டும் கொடுங் கோன்மையின் கற்பனைகள். இந்த ஸ்தலத்தில் எனக்கு நியாயங்கிடைக்காது. மஹாராஜனே, நான் உமக்குவாழ்க்கைப்பட்டு வெகுகாலமாயிற்று. என்னிடத்தில் பதிதுரோகம் என்றைக்காவது கண்டிருக்கிறீரா? நீர் கீறின கீற்றிற்கு மிஞ்சி நான் நடந்ததுண்டா? உமது மனம் கோணாமலிருத்தற்கே எப்போதும் முயன்று வந்தேன். என்னைப் பல்லோரறியப் பழிக்குட்படுத்தி யிருக்கின்றீர்; நானும் ஒரு ராஜகுமாரி என்பதை மறந்தீர். என்னுடைய அருமை பெருமைகளை யிழந்து நான் தீயவழியிற்

சென்றேனென்கின்றீர். பிராணபிக்ஷை உம்மிடத்தில் நான் யாசிக்கவில்லை. மானம் போனபிறகு பிராணனை ஒரு நிமிஷம் வைத்திருப்பது எம்போலியருக்கு அடுக்காது.

மெய்யுணர்ந்தார் பொய்ம்மேற் புலம்போக்கார் மெய்யுணர்ச்சி
கைவருதல் கண்ணைப் புலங்காப்பர்—மெய்யுணர்ந்தார்
காப்பே நிலையாய் பழிநாண நீள்கதவாச்
சேர்ப்பார் நிறைத்தாழ் செறித்து.

சுசீலர் இங்கு வருவதற்குமுன் நான் தம்மிடத்தில் எவ்வாறு நடந்துளேன்? அவர் வந்தபின் பதிவிரதைகள் செய்தலாகாத கருமம் யாதும் நான் செய்திலேன், என்னிடத்தில் தவறான நடவடிக்கைகள் உளவாயின் உலகநிந்தைக் குட்படுகிறேன்.

**மச்சரான்**—ஸ்திரீகள் இயற்கையாகவே ஸாகஸக்காரர்கள். காக்கையைப் பால்போல் வெளுத்ததென்பார்கள்.

**தாந்தி**—தாம் சொல்வது வாஸ்தவந்தான். என்னைப்பற்றின மட்டில் அது பொருந்தாது.

**மச்சரான்**—நீ குற்றஞ் செய்ததாக ஒத்துக்கொள்ளமாட்டாய்.

**தாந்தி**—நான் செய்த குற்றத்தை ஒத்துக்கொள்வேனே ஒழிய செய்யாதவற்றை ஒத்துக்கொள்ளேன். உமக்குச் சிறுபிராயமுதற்கொண்டு நண்பனாயிருந்த சுசீலனுக்கு உமது பத்தினியாகிய நான் எத்துணை உபசாரங்கள் செய்யக் கடமைப்பட்டிருந்தேனோ அத்துணைதான் செய்தேன். உமக்குப் பூஜ்யர் எனக்கும் பூஜ்யராகாரா? உமது ஆக்ஞையும் அவ்வாறுதானே இருந்தது. அதைநான் மீறி நடத்தலாகுமோ? நானும் மற்றுமுள்ளோரும் சதியோசனை செய்ததாகக்குற்றஞ் சாட்டப்பட்டிருக்கிறோம். சதியோசனையின் வாஸனையும் எனக்குத் தெரியாது. நிரூடன் நேர்மையுள்ளவனென்று நானறிவேன். உமது ராஜ்யத்தைவிட்டு அவன் ஓடினகாரணம் கடவுளோ அறியமாட்டார்; நான் எவ்வாறறிவேன்?

**மச்சரான்**—உனக்குத் தெரியாமலா அவன் ஊரைத் துறந்து போனான், அவனுக்கு நீ உடந்தையாய்த்தானிருத்தல்வேண்டும்.

**தாந்தி**—தாம் பேசும் பாஷையே எனக்குத்தெரியவில்லை. கனவு

கண்டவன்போற் பேசுகின்றீர். என்னுயிரைக் கேட்டீரா யின் அதை இங்கேயே கொடுத்துவிடுகின்றேன்.

**மச்சரான்**—உனது வரம்புகடந்த நடக்கை என்னைக்கனவிலும் வருத்துகின்றது. சுசிலனைப் புணர்ந்து ஒரு பெண்ணைப்பெற்றாய். நாதனில்லாத அது தொலைந்தது. நீ மரணதண்டனை விதிக்கப்பெற்றாலொழிய என் மனம் குளிராது.

**தாந்தி**—நாதா, உயிரை என்றும் நான் பொருளாய் எண்ணவில்லை. உயிரினும் சிறந்தது உமது அன்பு: அதை ஒரு காரணமுமின்றி இழந்தேன், நான் பெற்றுவளர்த்த பிள்ளை என்னண்டையிலேயே வரக்கூடாதென்று தடுத்துவிட்டீர். பிறந்து மூன்றுநாளாகாத பெண்ணை எடுத்து என்னவோ செய்தீர். என்னையோ தெருத்தெருவாய் வேசையென்று விளம்பரஞ் செய்தீர். எக்குலத்துப் பெண்ணுயினும் பிரஸவித்துப் பத்து நாள்வரையில் வெளியில் வருகிறதில்லை. மூன்றுநாளைக்குள் நீர் என்னை அம்பலத்திற் கொணர்ந்து நிறுத்தினீர்.

"என்செய லாவதியா தொன்றுமில்லை யினித்தெய்வமே
உன்செயலே யென்றுணரப் பெற்றேனிந்த வூனெடுத்த
பின்செய்த தீவினையா தொன்றுமில்லை பிறப்பதற்கு
முன்செய்த தீவினையோ விங்ஙனே வந்து மூண்டதுவே."

ஆண்டவனே, இத்துணைக் கஷ்டங்களையனுபவிக்கின்ற நான் உயிரை வைத்திருப்பது எதற்கு? பிராணனைவிட உடம்பட்டேன். மானத்தை யிழக்க எள்ளளவேனும் உடம்படேன். இது உறுதி. ருஜு இல்லாமல் என்மேற் குற்றஞ் சாட்டுதல் கொடுங்கோன்மையின் கூற்றே யன்றி நியாயமல்ல. கனவான்களே, குலதெய்வத்தைக் கேட்டறியப் போனவர்கள் வந்து விட்டார்களாமே. தெய்வபலமும் எனக்குத் துர்ப்பலந்தானோ இல்லையோ என்பதைத் தெரிந்துக் கொண்டு தீர்ப்பு செய்வீராக.

**முதல்பிரபு**—அரசியின் மனுவை நாம் அங்கீகரித்தல் வேண்டும், நியமன், தவன் இருவரையும் இச்சபைக்குத் தருவித்தல் வேண்டும்.

**சாந்தி**—நான் படுந்துயரத்தை என் பிதாவாகிய சக்ரவர்த்தி காணின் உங்கள் கதி என்ன ஆகுமோ அறியேன்.

(பிரவேசம்—நியமனும், தவனும்.)

**உத்தியோகஸ்தன்**—நீவிரிருவரும் கொண்டுவந்திருக்கும்பத்திரம் யதார்த்தமானதென்று பிரமாணம் செய்யுங்கள்.

**நியமனுந் தவனும்**—ஸத்தியமாய்ச் சொல்லுகின்றோம். குலதெய்வங்கள் கொடுத்த பத்திரந்தான் இங்கு வந்திருப்பது.

**மச்சரன்**—முத்திரையை உடைத்து வாசி.

**குமாஸ்தா**—(வாசிக்கின்றான்). "சாந்தி அற்புதப் பதிவிரதை; சுசீலன் நிரபராதி; நிருபன் விசுவாசமுள்ள பிரஜை; மச்சரன் கொடுங்கோலன்; பிறந்த பெண் மச்சரனுடையதே; இழந்தது அகப்படாவிடின் அரசனுக்குச் சந்ததிகிடையாது."

**பிரபுக்கள்**—தேவனுக்கு வந்தனம்.

**சாந்தி**—தேவர்களுக்கு அனந்தகோடி நமஸ்காரம்.

**மச்சரன்**—பத்திரத்திலுள்ளதை வாசித்தாயா, இது உன்கற்பனையா?

**உத்தியோகஸ்தன்**—எழுதியிருப்பதைத்தான் படித்தேன்,ஸ்வாமி.

**மச்சரன்**—பூசாரிகளின் பொய்களாயிருக்கும்; எனக்கு நம்பிக்கையில்லை. விசாரணை நடக்கட்டும்.

(பிரவேசம்—ஓடிவருஞ் சேவகன்.)

**சேவகன்**—மஹாராஜ், மஹாராஜ்,

**மச்சரன்**—ஏன் நம்மைக் கூப்பிடுகின்றாய்?

**சேவகன்**—இளவரசன், இளவரசன், தன் தயார் படுந்துயரந் தாங்காமல்,

**மச்சரன்**—தாங்காமல் என்னசெய்துவிட்டான்? தாமதிக்காமற் சொல்.

**சேவகன்**—கோபங் கொள்ளலாகாது.

**மச்சரன்**—நடந்ததைச் சொல்.

**சேவகன்**—உயிர் துறந்தான்.

**மச்சரன்**—தேவாபராதஞ் செய்தேன். அதற்கு இந்தத் தண்டனைகிடைத்தது! என் அருமை மகனே! மகனே! [சாந்தி

மூர்ச்சித்துக் கீழே வீழ்கிறாள்] சாந்தியும் கீழே வீழ்ந்துவிட்டாள். இதென்ன பாவம்!

**புனிதை**—புத்திரசோகத்தினால் விழுந்தாள். பிராணனும் போகின்றதே பாருங்கள்.

**மச்சரன்**—மூர்ச்சையாய்த்தானிருக்கிறாள்; இக்கேடு துக்கப்பெருக்கினால் வந்தது; தக்க ஔஷதங்களைக்கொடுத்து சாந்தியைத் திருப்பவும் மூர்ச்சைதெளிய உபாயந் தேடுங்கள்.

[புனிதையும் அவள் சேடிமாரும் சாந்தியைத் தூக்கிக்கொண்டு போய்விடுகிறார்கள்.]

[சபையிலுள்ளோரைப் பார்த்துச் சொல்வது.]

தயாபரனாகிய கடவுளே, உமக்கு நான் செய்த பிழைக்கு இது தண்டனை. மக்களையும் மனைவியையும் இழந்து மனந்தடுமாறினேன். என்ன பிராயச்சித்தஞ் செய்தபோதிலும் என்பாவம் என்னைவிட்டு நீங்காது. சுசீலனை மறுபடியும் எனது நண்பனாக்குவேன். நிரூபனையும் இந்த நாட்டிற்கழைப்பேன். இருவரும் ஸத்யவந்தர்கள். இவருக்குக் கேடுநினைத்த நான் என்னதுன்பமடைவேனோ அறியேன். சுசீலனை விஷங்கொடுத்துக்கொல்லச்சொன்னேன். செம்மையினின்றும் வழுவாத நிரூபன் கொலைசெய்ய விரும்பாமல் மனைவி மக்கள் நிலம் நீர் வீடுவாசல் பொன் முதலியவற்றைத் துரும்பாக நினைத்து என் நாட்டைவிட்டுப் போனான். நிரூபா, உன்னிலும் உத்தம புருஷன் உலகிலுளரோ? கோபத்தினாற் குருடனானேனே. மகாபாவம்!

[புனிதை திரும்பவும் பிரவேசம்.

**புனிதை**—ஐயோ, ஐயோ, என்ன பண்ணுவேன்! என்னுடல் பதைக்கிறதே!

**முதல்பிரபு**—உனக்கு வந்த ஆபத்து என்ன, அம்மணி?

**புனிதை**—ராஜனே, உன்னிலுங் கொடியனைக் கடவுள் படைத்திலர். துன்பத்தின்மேல் துன்பம் அடுக்கிவருகின்றது. பிறரை வருத்தவா உனக்குக் கடவுள் புத்தியை அளித்தார்? பாவம்! பாவம்! உன் கொடுமையை நினைக்க ஆத்திரம் பொங்கி வருகின்றது. சுசீலன்மேற் பழிசொன்னாய்; நிரூபனை நாடு

நீங்கச்செய்தாய்; பிள்ளையை இறந்தாய்; பெண்ணைப் பருந்துக் கிரையாக்கினாய்; பசாசும் இத்துணைக்கொடுமைசெய்யத் துணியாது. சர்வதோஷியான தாந்தியும் மாண்டாளடா, பாவி. இதுதானா அரசனுக்கு லக்ஷணம், சீச்சீ! சீச்சீ!! எந்த நரகம் உனக்கு அமையுமோ, அறியேன்.

முதல்பிரா|—பரமபிதாவாகிய கடவுள் நம்மை ரக்ஷிக்கட்டும்.

புனிதை—புண்யவதி இறந்தாளே! இவளைக்கொன்ற பாவம் மச்சரா, உனதே. நீ செய்திருக்கும் பாவத்திற்குப் பிராயச்சித்தமேயில்லை. எத்துணையோ பிறப்பில் நீ நரகத்திலிருந்துழலக்கடவாய்.

மச்சரான்—அப்பா, புனிதா, நீ என்மேற் சொல்லும் பழிகளெல்லாம் என்னதே; எவ்வளவு வசை சொன்னாலும் நான் அவற்றை ஏற்கவேண்டியவனானேன்.

முதல்பிரபு—புனிதா, பேசுவது அரசனிடத்திலென்பதை முற்றிலும் மறந்தாய்போலும். நாவடக்கமில்லாமற் பேசுதல் பெண்களுக்கழகல்ல.

புனிதை—கோபாவேசத்தினால் வரைகடந்து நான் பேசினதற்கு என்னை மன்னித்தல் வேண்டும். தீராத்துக்கம் வந்துவிட்டது. மகாராஜாவே, கிருபைசெய்து பேதையாகிய நான் பேசினவற்றைப் பொறுத்து என்னைக் காத்தல்வேண்டும். தமது பட்ட மஹிஷியிடத்தில் வைத்திருந்த அன்பின் மிகையால் மிதமிஞ்சிப்பேசிவிட்டேன். என் பர்த்தாவின் கதி என்ன ஆயிற்றோ? நான் இனி ஒரு வார்த்தைகூடப் பேசுகிறதில்லை.

மச்சரான்—நீ பேசினவையெல்லாம் உண்மையே; தவறுதல் என்னிடத்திலுள்ளது. நீ என்னை மன்னிக்கவேண்டுமேயன்றி நான் உன்னை மன்னிக்கும்படியான குற்றத்தை நீ செய்தாயில்லை. என் மகன் மனைவி இவருடைய பிரேதங்கள் வைக்கப்பட்டிருக்கிற இடத்திற்கு என்னை அழைத்துப்போதல்

வேண்டும். அவ்விருவரையும் அடக்கஞ்செய்த இடத்திற்குத் தினந்தோறுஞ் சென்று புலம்பிவருவேன். எனக்கு மிகுந்திருக்கும் ஆயுளை இவ்வாறே கழித்துவிடுவேன். என்னருமைத் தாந்தியும் பூரணனும் மரித்துக்கிடக்கும் இடத்திற்குப் போவோம், வா.

---

# மூன்றுமங்கம்.

## மூன்றுங்களம்.

---

மத்ஸ்ய தேசத்தில் ஒருகாடு—ஸமுத்ரக்கரையோரம்.

பிரவேசம்—கலியனும் தாந்தியின் பெண்ணும் நாவகனும்.

**கலியன்**—[நாவகனை நோக்கி] நமது மரக்கலம் இந்தத் துறையில் பத்திரமாயிருக்குமன்றோ ? இது மத்ஸ்யநாட்டைச் சேர்ந்த துறையாம்.

**நாவகன்**—சாமி, நீங்க சொல்றதெல்லாஞ் சரிதான் ; பெரிய பொசலடிக்கும் போலிருக்கு. போயிட்டுச் சுருக்கண வந்திடுங்க; நாம் செய்யப்போற அனீசத்தைக் கண்டு சாமியுங் கோவத்தைக் காட்டுது.

**கலியன்**—அப்படித்தானிருக்கிறது. எல்லாங் கடவுள் செயல்; நமது கப்பலை ஜாக்ரதையாய்ப் பார்த்துக்கொள். நான்போனவுடன் திரும்புகிறேன்.

**நாவகன்**—சுருக்குப்பண்ணுங்கசாமி; பொசல் வந்திடுச்சு; இங்கிட்டெல்லாம் புலிகரடி யுண்டு; ரொம்பதூரம் காட்டுக்குள்போகாதீங்க.

**கலியன்**—நீ போ; போனதும் வந்துவிடுகிறேன்.

**நாவகன்**—இந்தப் பாவத்தைக் கண்ணாலே பார்க்காமலே தப்பிச்சுக்கிணுபோறேன்.

**கலியன்**—[கையிலிருக்கும் சிசுவைப் பார்த்து] அந்தோ பெண்ணே ! செத்துப்போனவர்கள் தமது சூக்ஷ்ம சரீரத்தோடு

பூலோகத்தில் ஸஞ்சாரஞ் செய்கிறார்களென்று எனக்குக் கேள்வி ; உன்னுடைய தாய் சாந்தியை நேற்றிரவு கனவிற் கண்டேன் ; அவள்முகம் துக்கத்தினால் வாட்டமடைந்திருந்தது; வெண்ணிலாப்போன்ற ஆடை யுடுத்திருந்தனள். நான் கப்பலிலிருக்கும்போது எனக்கு மூன்று முறை நமஸ்காரஞ் செய்தனள். என்னுடன் பேசத்தொடங்கினபோது அவள் கண்களினின்று நெருப்புப்பொறி பறந்தது. சற்று நேரத்திற்கெல்லாம் கோபந்தணிந்து என்னைப்பார்த்துச் சொன்னதாவது; " ஐயா, கலியரே, அரசன் திருப்திக்காக என் அருமை மகளைக் காட்டில் அநாதையாய்விட உடம்பட்டீர். மத்ஸ்ய தேசத்தில் கேள்விமுறை இல்லாதவிடத்தில் என்குழந்தையை விட்டுவிடும். அதன்விதி கெட்டதாயிருப்பினும், மதியால் பிழைக்கவேண்டியிருக்கும். ஆனதுபற்றி என் குழந்தைக்குச் சுமதி என்று பெயரிடும். என் நாயகன் பேச்சைக்கேட்டு என் குழந்தைக்கு இக்கேடிழைக்க நீர் உடம்பட்டமையால், உமது மனைவி புனிதையை நீர் இனிக்காணப் போகிறதில்லை." இவ்வாறு சொல்லிவிட்டு உன் தாயின் உருவம் மறைந்தது. கனவிற்கண்டது உண்மையாகாதெனினும், அப்படியே செய்யத் துணிகின்றேன். சாந்தி இறந்துதான் போயிருத்தல்வேண்டும். சுசீலனுக்குப் பிறந்தபெண்ணென்று ஊகிக்கப்படுவதால், அவன் நாட்டிலேயே நீ [குழந்தை] இருத்தலும் நியாயந்தான். கடவுள் உன்னை ரக்ஷிப்பாராக. [பெண்குழந்தையைக் கீழேவைத்தான்] இங்கேயிருந்து வளரக்கடவாய். [குழந்தைக்குரிய ஆடை ஆபரணங்களடங்கிய ஒரு பெட்டியையும் குழந்தையின் பக்கத்தில் வைத்தான்.] ஐயோ பாவம்! பெற்றவள் செய்த பிழைக்காக நீ இந்தப் பாடுபடுகிறாய். புசலடிக்க ஆரம்பித்துவிட்டது. நான் இந்தப்பாவஞ்செய்ய விதி ஏற்பட்டது. என் செய்வேன், கடவுளே! குழந்தாய், உன்னை வாயுபகவான் தாராட்டுப்பாட்டுப் பாடித் தூங்கப்பண்ணுவார். நான் வந்தவழியேபோகின்றேன். புலியோ, கரடியோ, கத்துகின்றதே! நான்பிழைத்துக்

கப்பலுக்குத் திரும்பிப்போதல் இல்லை. என் விஷயத்தில் கடவுள் நின்றுகொல்லச் சம்மதியார்போலும்.

பிரவேசம்—கோவிந்தன் என்னுமிடையன்.

கோவிந்தன்—தடிப்பயல் கண்ணன் எங்கேத்தான் போனுனே ; ஆடுமாடுகளெல்லாம் பொசல்லே மூலைக்கு மூலை ஒடுது. பொழப்பைவிட்டுட்டுத் தடிப்பயல் பெண்தேடப் போயிட்டான். இந்த எளவுக்கு நான் என்ன பண்ணுவேன்? புலி ஆட்டைப் பிடிச்சுக்கிணு போயிட்டா என் வாயிலே மண் உளுமே. நல்ல பிள்ளை எனக்குப் பொறந்தான். இதென்ன அதிசயம்! கொளந்தை ஒண்ணு கிடக்குதே! பக்கத்திலே பொட்டி ஒண்ணு. என்ன அளகாயிருக்கு இந்த கொளந்தை ஊட்டுக்குக் கொளந்தையையும் பொட்டியும் எடுத்துக்கிணு போறேன். ஆட்டைத் தேடிக்கிணுபோன பயல் இன்னும் வரக்காணேனே - ஏலே கண்ணு - ஏலே கண்ணு - ஏலே கண்ணு.

கண்ணன்—வந்தூட்டேன், வந்தூட்டேன், அப்பா!

கோவிந்தன்—இங்கிட்டுத்தானு இருக்காய்; இங்கே ஒரு அத்சயமல்ல; வந்துப்பாரடா.

பிரவேசம்—கண்ணன் (இடையன் மகன்.)

எண்டா உடம்பெல்லாம் நடுங்கிறே! உடம்புக் கென்னடா ஒனக்கு?

கண்ணன்—ரெண்டு அதிச்யத்தைப் பாத்தேன்-சொல்லட்டா பாத்தப்பரம் என்ன பயமாயிருக்கு தெரியுமா எ-அப்பரே இந்தமாதிரி நான் எப்பவும் பாத்ததேயில்லை! உடம்பு இன்னம் நடுங்குதே பாத்தையா அப்பா!

கோவிந்தன்—என்னுத்தைப் பாத்தூட்டு ஒளரி அடிச்சுகிணுநடுங்கறே சொல்.

கண்ணன்—ஆட்டைத்தேடிக்கிணுகாட்டிலே போனேன். அங்கே ஒரு ஆளு ஆள்முழுங்கி, மூண்டாசு கட்டிக்கிணு ஒடிஞன். அவனைத் தொரத்திக்கிணு ஒரு கரடி ஒடிப்பிடிச்சு

அவன் ரத்தத்தை உரிஞ்சறதைப் பாத்தேன். எனக்குப் பயமாய்ப் போச்சு: அங்கிட்டிருந்து கடலோரத்துக்குப்போனேக்கே அங்கே பேரினவு ஒண்ணு கண்டேன். இண்ணிக்கு விடியச்சே யார் மூஞ்சிலே முழிச்சேனோ. கடலிலே மலை மலையாய் அலை கௌம்பிச்சு. அலை நடுவிலே ஒரு கப்பல் அம்பிட்டுக்கிச்சு, கப்பலிலே இருந்தவங்களெல்லாம் வாள் வாள் இண்ணு கத்தினாங்க. ஒரு பெரிய அலை வந்திச்சு. அப்பா! என்ன சொல்வேன். கப்பல் ஆளுவ எல்லாம் முழுகிப் போச்சு. அவங்க அழச்சே எனக்கும் அழ வந்தது. ரெண்டதிசயம் பாத்ததுமுதல் ஒடம்பு நடுங்குது, என்ன பண்ணுவேன், அப்பா!

கோவிந்தன்.—எஞ்சாமி! எப்படா இதெல்லாம் பாத்தே.

கண்ணன்.—இப்பத்தான் அப்பா, கரடி அந்த ஆளை இன்னுந் திண்ணு முடிஞ்சிபாது.

கோவிந்தன்.—நான் கிட்ட இருந்தால் அந்த ஆளுக்கு ஒதவி பண்ணியிருப்பேன்.

கண்ணன்.—கப்பக்கிட்டபோயிருந்தா என்ன பண்ணியிருப்பீங்களாம்?

கோவிந்தன்.—அதிருக்கட்டும். நீ சாவங்களைப் பாத்தே, நான் உசிரோடிருக்கிற இந்தக் குழந்தையைக் கண்டேண்டா. குழந்தையைப் பாரடா, என்ன அளகாயிருக்குது. அந்தப் பொட்டியைத்திற. அதிலே என்ன இருக்கு பாப்பம்.

கண்ணன்.—ஏ அப்பா, ஒனக்குத் தசைதான். எம்மாந் தங்கம், எம்மாந் தங்கம்.

கோவிந்தன்.—எலே, பொன்னைக் கண்டா வாள் வாள்ணு கத்தலாமாடா! சும்மா இருடா! வாயை மூடிக்கிட்டு ஊட்டே போவோம். ஆடுகெட்டுப்போனாப்போகுது இப்படியே வாடா.

கண்ணன்.—நீ ஊட்டே போ! நான் அந்த ஆளைக்கரடி திண்ணூட்டுதோ இல்லையோண்ணு பாத்தூட்டு வாரேன். ஆளுடம்பில் மிஞ்சினதைக் குழியை வெட்டி புதைச்சூட்டு வாரேன் போவ

கோவிந்தன்.—அதுவும் நல்ல காரியந்தான். ஆள் யாரெண்ணு தெரிஞ்சுகொள்ள ஏதாவது இருந்தா என்னை அங்கே அழைச்சுகிணுபோ. அதை நாம் தெரிஞ்சுகொண்டால் நல்லது.

கண்ணன்.—நீயும் வந்தியானு ரெண்டுபேருஞ் சேர்ந்து குழி வெட்டி அவனை அதில் புதைக்கலாம்.

கோவிந்தன்.—அதிருக்கட்டும், நமக்கு நல்ல தெசைதான் இப்போ. நம்ம பாட்டன் நாளிலேயும் இவ்வளவு தங்கத்தை நாம் பார்த்திருப்பமா? ஐயனாரப்பனல்லவா நமக்குத் தசை யடிக்கப் பண்ணாரு.

# நான்காமங்கம்.

பிரவேசம்.—காலபுருஷன்.

## முதற்களம்

---

### மத்ஸ்யநாட்டரசன் சபாமண்டபம்.

பிரவேசம்-சுசீலனும் நிரூபனும்.

கா-ன் —சில்லோரை மகிழ்விக்கிற நான் பல்லோரைப் பரீக்ஷிக்கிறேன்; நன்மை பயக்கும் சந்தோஷமும் தீமையுண்டாக்கும் அச்சமும் என்னாற் சோதிக்கப்படுகின்றன. பிழைகளைச்செய்விப்பவனும் அவற்றை வெளிப்படுத்துகிறவனும் நானே. நான் இப்போழ்து என் யாத்திரையைத் தொடங்கப்போகின்றேன். பதினாறு வருஷங்களில் நடந்தவற்றைச்சொல்லாமல் விட்டேனென்று என்மேற் குற்றஞ்சொல்லலாகாது. கற்பகாலம் பிடித்த காரியங்களை ஒரு நிமிஷத்தில் மாற்றவும் ஒரு நிமிஷத்தில் வெகுகாலம் பிடிக்கும் வினைகளை ஆற்றவும் யான்வல்லேன். நான் இறந்த காலத்திலும் நிகழ்காலத்திலும் ஒருசீராய் நடக்கின்றவன். பழமையைப்புதுமையாகவும்புதுமையைப் பழமையாகவும் காட்டும் வல்லமை என்னிடத்துளது. இனிச் சபையோருக்கு நலமான சில காக்ஷிகளைக் காட்டப்போகின்றேன். சேதிநாட்டரசனாகிய மச்சரன், மனைவி மக்களை இழந்து மதி மயங்கி உழன்று கொண்டிருக்கின்றான். மத்ஸ்ய நாட்டிற்சென்று அங்கு நிகழ்பவற்றைச் சொல்வேன். சுசீலனுக்குத் தருமனென்று ஒரு புத்திரனுண்டு. மச்சரன் மகள் சுமதி இடையன் கோவிந்தனால் வளர்க்கப்பெற்று மடந்தைப் பருவமடைந்திருக்கின்றாள். சுமதியைப்பற்றி இப்போது உங்களுக்கு ஒன்றுஞ் சொல்லேன். காலக்கிரமத்தில் நீங்கள் அதனை அறிவீர்.

சுசீலன்—நிருபனே, தாம் கேட்டவற்றை இல்லையென்று சொல்ல முடியாது. தாம் அடுத்தடுத்துக் கேட்டல் என் மனத்தை வருத்துகின்றது. தாம் வேண்டுகிறபடி செய்வேனாயின் எனக்கு மரணம் நேரிடும்.

நிருபன்—என்னூரைவிட்டு இங்கு வந்து பதினைந்து வருஷமாயிற்று: அன்னிய தேசப்பழக்கம் மிகுதியாயுண்டாயிருந்தும் உள்ளூரிலேயேபோய் இறக்க விரும்புகின்றேன். மச்சராஜாவும் தான் செய்த பிழைகளுக்கு வருந்தி என்னை வரும்படிக் கோருகின்றார். நான் அங்கே போவதனால் அவ்வரசனுக்கு ஆறுதல் உண்டாகும். இந்தக்காரணங்களை முன்னிட்டுத்தான் சேதி நாட்டிற்குத் திரும்பவும் செல்ல விரும்புகின்றேன்.

சுசீலன்—தோழரே தோல் தாம் போதலுக்கு நானுடம்படேன். தம்மால் எனக்குக்கிடைத்திருக்கும் நன்மை பல: அவற்றின் முதிர்ந்த பலனை நானனுபவித்தலுக்குத் தாமிங்கே இருத்தல் வேண்டும். அன்றேல் அவை பயனிலவாகும். சேதிநாட்டின் பெயரே எனக்கு எட்டிக்காய்போலக் கசக்கின்றது. மனைவி மக்களுடைய மரணத்துக்குக் காரணமாயிருந்த மச்சரனைக் காணுதல் எப்படியாகும்? அது நிற்க:—என் குமாரன் தருமனை நீர் பார்த்து எத்தனை நாளாயிற்று? குணவானான புத்ரன் இறந்துபோனால் எவ்வளவு துக்கம் உண்டாகுமோ அவ்வளவு துக்கந்தான் துர்க்குணமான பிள்ளைகள் ஜீவதசையோடிருத்தலினு முண்டாகின்றது.

நிருபன்—நான் தமது குமாரனைக்கண்டு மூன்றுநாளாயிற்று. வேறெந்தவிடத்தில் அவர் மனத்திற்குக் களிப்புண்டாகின்றதோ அறியேன். அரசர்க்குரிய யானையேற்றம் குதிரையேற்றம் முதலானவற்றைத் துறந்து அரண்மனைக்கே வாராமலிருக்கின்றார்.

சுசீலன்—நானும்சும்மாவில்லை: தூதர்களையனுப்பித் தருமனுடைய மருமங்களை அறிந்துவரச்சொன்னேன். மிகவும் ஏழையாயிருந்த ஓர் இடையனுக்கு மிகுந்தபொருள் இப்போழ்துண்டாயிருக்கின்றதாம். அவ்விடையன் வீட்டிலேயே தருமன் குடிகொண்டிருக்கின்றான்.

நிருபர்—அவ்விடையனுக்கு மிகுந்த ரூபலாவண்யங்களுள்ள பெண்ணொருத்தியிருக்கிறாளாம். கள்ளி வயிற்றினில் பிறப்பது போல் இடையனுக்கு இலக்குமி பிறந்திருக்கின்றாள்.

குசிலர்—என் காதிலுமவ்வாறுதான் பட்டது. தருமன் மனத்தை இடைச்சி கவர்ந்தால் மோசமன்றோ? நாமிருவரும் அங்கே போய் நடப்பவற்றை நேரே பார்த்துவருவோமா? இடையனிடமிருந்து உண்மையை அறிவது கஷ்டமன்று. சிறிது காலம் அவருக்குப்போதலை நிறுத்தி எனக்குதவி செய்வீராக.

நிருபர்—தமது இஷ்டப்படியே ஆகட்டும்.

குசிலர்—உத்தமநண்பனே—நாமிருவரும் வேஷம் மாறிப்போதல் வேண்டும்.

---

## நான்காமங்கம்.

### இரண்டாங்களம்.

---

**இடையன் வீட்டருகிலுள்ள பாட்டை.**

பிரவேசம்—சுயம்பு (என்னும் முடிச்சுமாறி) [பாடுகிறான்.]

மலர்ந்த மல்லிகை நறுமணம் வீசுது
மாப்பிள்ளை மாருக்குச் சுகமாக,
உலர்ந்த முல்லைகளுயரத்தில் படர்ந்து
ஊருக்குதவாமல் வாடுதுபார்.
வேலிக்காலில் கருவேலமரம்
அதன் கூரானமுட்கள் நீட்டமதாய்க்
காலிலே தைப்பேனென்று சொல்லிக்கொண்டு
பாலர்களைப் பயமுறுத்துது பார்.
வானம்பாடி யொன்று நடு வானத்திலே
வாகனமில்லாம லோடிக்கொண்டு

தேனும் பாலும் போலத் தித்திரிதித்திரி
தாளம் போட்டுக்கொண்டு பாடுதுபார்.

சின்ன ராசாவண்டை சேவகமா யிருக்கச்சே, என்ன உசத்தியான சரிகைவேட்டிகள் போட்டிருந்தேன்; சேவகமும் போச்சு, சரிகைவேட்டியும் போச்சு.

ஆண்பிள்ளை யாகநான் பிறந்துவிட்டு
அழுவதினாலெனக் காவதென்ன
சாண்வயிற்றைத் தூர்க்கவழி இல்லாவிட்டால்,
சங்காதமல்லவோ சங்கரனே.
தச்சனுங் கொத்தனுந் தளராமே
இச்சையாய்த்தின்று வளரச்சே
பிச்சையைவாங்கி நான்பிழைக்க விதித்தாயோ
கச்சியில் வாழுங்கன வேகம்பனே.

எனக்கு எடுத்த தொழில் முடிச்சு மாறுதல். என் அப்பன் எனக்குச் சுயம்பு என்று பேரிட்டான். நான் பிறந்தபோது புதன் உச்சமாயிருந்ததாம். மனிதர் கீழேவைத்து மறந்துபோனதை எல்லாம் என்னுடையதாகப் பண்ணுவேன். வழிப்பறி செய்வோமென்றால் தூக்கில் மாட்டிவிடுவார்கள்: நையப்புடைக்கவும் புடைப்பார்கள். தூக்குமரத்தையும் அடியையும் நினைத்துப்பார்த்தால் உடம்பு நடுங்குகிறது. அந்தத் தொழில் எனக்குச் சரிப்படாது. இதோ ஒரு அசடு வருகிறது! என் கைத்திறத்தைக் கொஞ்சம் இவனிடத்தில் காட்டுகிறேன்.

பிரவேசம்—இடையன் மகன் கண்ணன்.

**கண்ணன்**—சத்தே கணக்கைப் பாக்கரேன்: ஆட்டுமயிர் கிராக்கியாயிருக்குது. ஒருமணு பதினைஞ்சே சொச்சம் ரூபாயாகுது. ஆயிரத்தன்னூறு ஆட்டின் மயிரை வித்தா ரொம்ப பணம் கெடைக்கும், வேஷாக்.

**சுயம்பு**—இந்தக்குருவியை வலையில் பிடித்தால் நமக்குநல்ல அடி.

**கண்ணன்**—ஆட்டுமயிரை வித்துப் பணமாக்கினாலல்லோ, பொங்கல் செலவை வீச்சிலேவிடலாம். வெல்லம் வாங்கணும்: பணங்

கள் வாங்கணும்: இன்னம் எத்தனையோ வாங்கணும்: வெறுங் கை முளம் போடுமா—தங்கச்சி சுமதிக்கு அரிசிகூட ஒலையில் வைக்கத்தெரியாது: எங்கப்பன் அவளுக்கல்ல பட்டங் கட்டி வைச்சிருக்காரு. விருந்தாடிகளுக்கு மூலைகட்டி வைச்சிருக்காள்: பாட்டுப்பாட மூனு ஆளுவளைத் திட்டம்பண்ணியிருக்காங்களாம். அவங்களிலே ஒத்தன் தேவாரந்தான் பாடுவானும். ஏலம், கிராம்பு, சாதிக்காய், சாதிப்பத்திரி. இஞ்சி எல்லாம் விருந்துக்கு வேணுமல்ல. பணச்செலவு ரொம்பத்தானுகுது.

**சுயம்பு**—(தரையில் விழுந்து புரண்டுகொண்டு) நான் எதற்காகப் பிறந்தேன், பாவி !

**கண்ணன்**—என்சாமி, இதென்ன எளவு !

**சுயம்பு**—ஐயா கோனுரே, மெல்ல என்னைத் தூக்கும்: மேலிருக்கிற சட்டையை அவிழும்: இல்லாவிடில் செத்துப்போவேன்.

**கண்ணன்**—கிழிஞ்ச துணி இன்னம் நூறிருந்தாலும் உமக்குப்போதாது. இருக்கிறதை எடுத்துப்போடச் சொல்ரீமே !

**சுயம்பு**—ஐயா கோனுரே, என்ன சொல்வேன். நான்பட்ட அடி எனக்கு ஏழெட்டு ஜன்மத்திற்கும் போதும் போதும். தாங்க முடியவில்லை : எலும்பு முறிந்து போயிற்று.

**கண்ணன்**—அம்மாம் அடி எப்படித் தாங்கினீமோ, பாபம் !

**சுயம்பு**—நான் போட்டிருந்த நல்ல உடுப்புகளையெல்லாம் பிடுங்கி என் கைக்காசையும் பறித்து இந்தக்கந்தைகளை என்மேற் போர்த்துவிட்டோடி விட்டான்.

**கண்ணன்**—திருடனுவ குருதைமேலே வந்தானுவளோ, நடந்து வந்தானுவளோ ?

**சுயம்பு**—கால்நடையாகத்தான் வந்தான்.

**கண்ணன்**—ஒங்க சட்டையைப் பார்த்தா திருட்டுப்பயல் கால் நடையாகத்தான் வந்திருக்கணம். மொள்ளக் கையைக் கொடும். உம்மைத் தூக்கப்பார்க்கிறேன் [கண்ணன் சுயம்புவைத்தரையிலிருந்து தூக்கிவிடுகிறான்.]

சுயம்பு—ஐயா கோனாரே, ஐயா கோனாரே! மெல்லத் தூக்கையா உடம்பு இசிவு எடுத்துப்போயிருக்கிறது.

கண்ணன்—நிக்கமுடியுமா, ஐயா?

சுயம்பு—[கண்ணன் பையில் கைபோட்டு அவனுக்குத் தெரியாமலே அதிலுள்ள பணத்தை எடுக்கிறான்] ஐயா, ஐயா. மெள்ளத்தூக்குங்கள். கோனாரே, நீங்க நல்லவங்க. கடவுள் உமக்கு அருள் செய்வார்; பெரிய தருமஞ் செய்தீரையா.

கண்ணன்—உமக்குச் செலவுக்குப்பணம் வேணுமா, எமபையில கொஞ்சங்காசு இருக்கது: அதை உமக்குத்தாரேன்.

சுயம்பு—உமக்கு நமஸ்காரம்: எனக்கு உமது பணம் இனித் தேவையில்லை. ஒரு நாழிகை வழிதூரத்தில் எனக்கு உறவின் முறையான் ஒருவனிருக்கிறான். அவனிடத்தில் வேண்டியவற்றை வாங்கிக்கொள்ளுகிறேன். உம்முடைய உபகாரம் மிகவும் மெச்சத்தக்கதாயிருக்கின்றது.

கண்ணன்—உம்மை யடிச்சு உம்முடைய காசைப் பிடுங்கிக்கொண்டவன் எப்படியிருந்தான், தெரியுமா?

சுயம்பு—எனக்கு அவனை நன்றாய்த் தெரியும். ஒரு காலத்தில் இளவரசனிடத்தில் சேவகனாயிருந்தான். அவனை அரண்மனையிலிருந்து அடித்துத் துரத்திவிட்டார்கள். யாதோ துஷ்ட நடவடிக்கைகளைக் கண்டுதான் அரண்மனையிலிருந்து வெளியில் வந்துவிட்டான். பின்பு பற்பல தொழில்கள் செய்து வந்தான். கடைசியாகத் திருட்டுத்தொழிலை ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறான். சிலர் அவனை சுயம்பு என்று பெயரிட்டழைக்கிறார்கள்

கண்ணன்—சுயம்பு பெரிய காலாடியாச்சே: கூத்தாடிப் பயலல்லவா?

சுயம்பு—நீர் சொல்வதெல்லாஞ் சரி: சுயம்பு துஷ்டன்தான்.

கண்ணன்—அவன் பேமானிப்பயல்: அவனை விளக்குமாற்றாலடித்தாலும் அடிபட்டுக்கொண்டு வாய்திறவாமல் ஓடிப்போவான் அவனை ஆண்பிள்ளை யென்று சொல்வது தகாது.

சுயம்பு—நானும் அவனைப் போன்றவன்: என் சங்கதி தெரிந்துதான் என்னைப் பிணம் புரட்டினான்.

கண்ணன்—உமக்கு உடம்பு வலி இப்போது குறைந்திருக்கிறதா?

சுயம்பு—முன்னிலும் ஆயிரமடங்கு சவுக்கியம் ஐயா: நான் போய் வருகிறேன்.

கண்ணன்—கொஞ்சதூரம் உம்முடன் வரட்டுமா?

சுயம்பு—உமக்கு அந்த சிரமம் வேண்டாமையா.

கண்ணன்—போய்வாரும்: நான் கடைக்குப்போய் சாமான்கள் வாங்கவேணும்.

சுயம்பு—கடவுள் உம்மைக் காப்பாற்றுவாராக. [கண்ணன் போய் விடுகிறான்] போடா, இளிச்சவாய்ப்பயலே. கடைக்குப்போய் சாமான் வாங்கப்போகிறாயோ! உனக்குப்பணம் ஏது? உன் தலையை ஒரு தடவை தடவியாயிற்று. பொங்கல் நடக்கும் போதும் வந்து ஒரு கை பார்க்கிறேன். என் சமர்த்தை உலகத்தார் புகழும்படிச்செய்கிறேன்-பஹ்வாரே! சபாஷ் சுயம்பு.

கல்லிலு முள்ளிலும் நடந்தாலென்
சாசு கிடைச்சா லேச்சுண்டோ?
புல்ல ருள்ளமட்டில் புத்தியுள்ளவன்
பிழைப்புக் கவலைது புதுமையாமே.

---

# நான்காமங்கம்.

## மூன்றாங்களம்.

---

### இடையன் வீட்டுக்கெதிரிலுள்ள புற்றரை.

பிரவேசம்:—தருமனும் சுமதியும்.

தருமன்:—சுமதி, உன் அவயவம் ஒவ்வொன்றையும் பூவாலலங்கரித்திருப்பது உன்னை ஆயிரமடங்கு அதிக அழகுள்ளவளாகச் செய்கின்றது. உன்னை எவர் இப்போது இடைச்சியென்று சொல்லலாம்? நீ தேவதையாயிருக்கின்றாய். உன் வீட்டில் பொங்கல் உற்சவமானது தேவர்கள் சபைபோலாகும்.

சுமதி.—தாம் சொல்வதை மறுத்தல் எனக்குத் தகாது. தாம் ராஜ குமாரனாயிருந்தும் இடையராடையுடுத்து இடையரிலொருவ ராயிருந்துகொண்டு என்னைத்தேவதை என்று உயர்த்திச் சொல்லுகின்றீர். எங்கள் பண்டிகைகளில் தவறுதல்களிருப் பது வாடிக்கையாயிருப்பதால், தாம் இந்த உடுப்புப் போட் டிருத்தலைப்பற்றி வெட்கப்படாமலிருக்கிறேன். கண்ணாடி யில் என் உருவத்தை இப்போது பார்ப்பேனாயின் நான் மூர்ச் சையாய்ப் போவேன்.

தருமன்.—என் அதிருஷ்டந்தான் ராஜாளிப்பக்ஷி உன் வீட்டண்டை வரும்படி நேர்ந்தது.

சுமதி.—கடவுள் உம்மை ரக்ஷிப்பாராக! என் குலத்தையும் உமது குலத்தையும் பார்க்குங்கால் எனக்கு அச்சமுண்டாகின்றது. தாம் ஒன்றிற்கும் பயப்படவேண்டுவதில்லை. தாம் தற்செய லாய் இங்கு வந்ததுபோலவே தமது பிதாவும் வருவாராயின் என் கதி என்ன ஆகும்? இழிகுலத்தாரோடு தாம் கலந்திருப் பதைக் கண்டால் அவருக்கு என்ன கோபம் பிறக்காது? தமது அருளால் கிடைத்த இந்த ஆடையை யுடுத்து அவர்க் கெதிரில் நிற்க என் மனம் துணியுமா?

தருமன்.—நீ அஞ்சவேண்டுவது ஒன்றுமில்லை. தேவர்களும் மிரு கங்களாக மாறி இன்பம் நுகர்ந்துள்ளார். பிருகஸ்பதி காளை உருவெடுத்தார். வருணன் ஆட்டுக்கடாவானார். சூரியன் என்னைப்போல இடையனானார். இம்மூவரும் உருமாறினது உன்னிலும் அழகில் மிகுந்த பெண்ணைப்பற்றியல்ல.

சுமதி.—ஆயினும் தாம் கவனிக்கவேண்டியதொன்றுண்டு:—தமது பிதா கூடாதென்றால் தாம் என்னை மணப்பது எவ்வாறு? தாமாவது தமது கருத்தை மாற்றவேண்டும்: நானாவது உயி ரைத் துறத்தல் வேண்டும்: இந்த இரண்டு காரியங்களி லொன்று நடக்கும்.

தருமன்.—காந்தா, நீ தகாதவற்றை நினைந்து மனத்தைப்புண்படுத் திக்கொள்கின்றாய். இந்தச்சமயம் எல்லோரும் குதூகலமா

யிருத்தல்வேண்டும். என்னை உனக்குஸமர்ப்பித்துவிட்டேனே ஒழிய, என் பிதாவுக்கு நான் கடமைப்பட்டவளாகவில்லை. முகமலர்ச்சியோடு விருந்தினரை உபசரி. நீ இன்று கலியாணக்கோலம் பூண்டிருத்தல் வேண்டும்.

**சுமதி**—தேவர்கள் நம்மை ரக்ஷிக்கட்டும்.

**தருமன்**—வந்திருக்கிற விருந்தினர்களுக்கு வேண்டியவற்றைக் கொடுத்து களிக்கச் செய்வாயாக.

[பிரவேசம்—இடையன் கோவிந்தன்: சுசீலன்: நிரூபன் [இவ்விருவரும் வேஷம்பூண்டிருந்தார்கள்] மந்தை, விந்தை—என்னும் இடைப்பெண்கள்—வேறுசிலர்.]

**கோவிந்தன்**—என் கண்ணே, சுமதி—என் வீட்டுக்காரி இருந்தபோது பொங்கல் தினத்தில் எவ்வளவோ வேலை செய்தாள். சமையல், பரிமாறுதல், விருந்தினரை விசாரித்தல், பாடல், ஆடல், எல்லாவற்றையும் கவனிப்பாள். நீயோ வயிறு நிரம்ப உணவை உண்ட விருந்தாடிபோல் ஒன்றிலுஞ் சலக்காமல் தனியே நின்றுகொண்டிருக்கிறாய். என் வீட்டிற்கு நீதானே யஜமாட்டி. உன் வேலையைச்சரியாய்ச் செய்தாற்றானே விருந்தாடிகள் திருப்தியடைவார்கள். வெட்கப்பட்டுத் தூரத்தில் நின்றுகொண்டிராதே. நம்முடைய பசுக்களும் ஆடுகளும் மேலும் மேலும் விருத்தியடைவதற்கு எல்லாரையும் மனங்களிக்கச்செய்.

**சுமதி**—[சுசீலனை நோக்கி] ஐயா, தங்கள் வரவு நல்வரவாகுக! என் பிதா தங்களுக்கு ஆதித்யஞ் செய்ய உத்திரவு செய்திருக்கின்றார். அவர் மனம் கோணாமல் எல்லாவற்றையுஞ்செய்ய நான் கடமைப்பட்டவள். [நிரூபனை நோக்கி] தங்கள் வரவும் நல்வரவாகுக. [விந்தை என்னும் இடைப்பெண்ணை நோக்கி.] விந்தா, இங்கு வந்திருக்கும் கனவான்களுக்குப் புஷ்பங்கள் கொண்டுவா: வயது முதிர்ந்தவர்களுக்குத் தக்க புஷ்பமாலைகளைக் கொணர்தல்வேண்டும்.

**சுசீலன்**—இடைப்பெண்ணே, உன் உபசாரங்களால் நான் மிகுந்த சந்தோஷத்தையடைந்தேன். நாங்கள் வயதில் முதிர்ந்தவர்

களாயிருப்பதற்குத் தக்கபடி எங்களுக்கு மாரிகாலத்துப் புஷ்பங்களாற் செய்தமாலைகளைக் கொடுத்தாய்.

மதி—(நிருபனைநோக்கி) ஐயா, தமது வயதிற்கேற்ற இந்தப் பூக்களை அங்கீகரித்தல்வேண்டும்.

நபன்—உன் பசுக்களில் ஒன்றாய் நான் இருந்தேனாயின், புல்லை மேயாமல் உன்னையே பார்த்துக்களித்துக்கொண்டிருப்பேன்.

மதி—அவ்வாறு செய்வீராயின் நீர் இளைத்து எலும்பெடுத்துப் போவீர். [கருமனைநோக்கி] உத்தமரே, உமக்குவஸந்தகாலத்துப் பூக்கள்கொடுக்க விரும்புகின்றேன். காலமோ முன்பனிப்பருவமாயிருக்கின்றது. புஷ்பதேவதைகளை வேண்டிக்கொள்கிறேன். நீலோற்பலங்கள், ஜாதிமலர்கள், மல்லிகை, சம்பகம், முதலிய புஷ்பங்களால் வேய்ந்த மாலைகளல்லவோ தம்மைப் போன்ற யௌவன புருஷர்களுக்கு என்னைப்போன்ற சிறுமியர் தரல்வேண்டும். அவை இக்காலத்தில் கிடைக்கக் கடவுள் அருள்புரிவாராக. தமக்கென்று உத்தேசித்த இந்தப்புஷ்பமாலையைத் தாம் பெற்றுக்கொள்ளவேண்டும். வணங்கிப் பிரார்த்திக்கின்றேன்.

நுமன்—உன் அருமைக்கையால் கொடுக்கப்பட்ட ஊமத்தைப்பூ எனக்குக் கற்பகமலராகும். உன்வாக்கை ஒருதரங்கேட்டால எப்போதும் அதையேகேட்கவேண்டுமென்ற ஆசைபிறக்கின்றது. நீ பாடினல் உன்பாட்டை மாத்திரம் எப்போதும காது கேட்க விரும்புகின்றது. நீ ஆடும்பொழுது, கடலின் அலை போல ஓயாமல் நீ ஆடிக்கொண்டிருத்தல் வேண்டுமென்று தோன்றுகின்றது. உன் காரியம் ஒவ்வொன்றும் மனத்தைப் பூரித்தலால் தெவிட்டலென்பதையே அறியேன். உன் அருமை, வாக்குக்கெட்டாததாயிருக்கின்றது.

மதி—தாம் என்னைப்புகழ்கின்ற அளவினுக்கு நான்பாத்திரமல்ல. ராஜவம்சத்திற்பிறந்த தமக்கும் அல்பத்தனத்துக்கும் வெகுதூரம். இளம்பிள்ளைகள் மனவெழுச்சி மிகுதியாயுள்ளவர்கள்.

என்னைத்தாம் வரிப்பது மாத்திரம் யுக்திபுத்திக்கு ஒத்ததா யில்லையென்று அச்சப்படுகின்றேன்.

தருமன்—நீ அஞ்சும்படியானதை நான் என்றுஞ்செய்யேன். நாமிருவருங்கைகோர்த்து ஒருநாட்டியம் ஆடுவோம்.

சுமதி—தமது மனங்கோண ஒன்றுஞ்செய்யேன். தமது இஷ்டப் படியே செய்வேன்.

சுசீலன்—இடைக்குலத்தில் இவ்வளவு அழகானபெண் என்றாவது பிறந்ததுண்டா? தப்பிப்பிறந்தவள் இவள்.

ஸ்ரீநுபன்—தருமனும் இடைச்சியும் என்னவோ பேசிக்கொள்ளுகி றார்கள், பாரும்: இடைச்சி நாணச்சின்னத்தைக் காட்டுகின் றாள்; இடைச்சி துரைச்சிதான்.

கண்ணன்—வாத்தியத்தை வாசியுங்கள்.

சுசீலன்—கோனாரே, உம்முடையபெண்ணுடன் கைகோத்து நட னஞ்செய்யுஞ் சிறுபிள்ளை யாரென்று அறிவீரோ?

கோவிந்தன்—அச்சிறுவருக்குப்பெயர் துரைசாமியாம். தன்குலம் மேற்குலமென்று சொல்லுகிறார். அவர்வாக்கில் எனக்கு நம் பிக்கையுண்டாயிருக்கின்றது. என் மகளிடத்தில் தனக்குக் காதல் பிறந்திருக்கிறதென்கிறார். என் பெண் யேலேயே கண்ணாயிருக்கின்றார். இவ்விருவரும் ஒத்த தம்பதிகளாயிருப் பார்களென்றெண்ணுகிறேன்.

சுசீலன்—அவள்நாட்டியம் எவ்வளவு அழகாயிருக்கின்றது.

கோவிந்தன்—என்பெண்செய்யும் எந்தக்காரியத்திலும் தவறுஉண் டாவதில்லை. என் மகளை நானேபுகழ்ந்துபேசுவது உசிதமன்று தான். உண்மையைத் தம்மிடத்திற் சொல்லவேண்டியதன் றோ? துரைசாமிக்கு என்பெண் வாழ்க்கைப்பட்டால் அவ னுக்குக் குறைவு ஒன்றும் வராது.

பிரவேசம்—சிற்றாள்.

சிற்றாள்—ஆண்டே, சீட்டிவிக்கரவன் ஒத்தன் இங்கே வந்திருக் கான், அவன்பாட்டையிலே கேட்டீங்களோ, ஆடவே மாட்டீ

ங்க, என்னு என்னு பாட்டுப் பாடறான்: மெத்த நல்ல பாட்டுங்க ஆண்டே-

கண்ணன்—இது நல்லசமயம்: அவளை அழைத்துவா: வேடிக்கைப் பாட்டை அழுதுகொண்டுபாடினாலும், துக்கமான பாட்டைச் சிரித்துக்கொண்டு பாடினாலும் கேட்கிறதற்குத் தயாராயிருக்கிறோம்.

சிற்றா—ஆண்டே, ஆம்பிள்ளைகள் பாட்டும்பாடுவான், பொம்பிள்ளைகள் பாட்டும் பாடுவான். அவுக அவுகளுக்குத் தக்கபாட்டு வைச்சிருக்கான், எசமானே, பலவித சாயம்போட்ட ரவிக்கை சீட்டி பாவாடைச்சீட்டி கொண்ணாந்திருக்கான். சீட்டிகளெல்லாம் பள்ளிச்சி பள்ளிச்சின்னு மின்னுது.

கண்ணன்—அவளைப் பாடிக்கொண்டே இங்கே வரச்சொல்லு.

சுமதி—கேலிப்பாட்டு ஒன்றையும் பாடக்கூடாதென்று கண்டிப்பாய்ச்சொல்லி அழைத்துவா.

பிரவேசம்—சுயம்பு.

சுயம்பு—[பாடிக்கொண்டு]

பால்போலவெளுத்திருக்கும் பனித்தரைமேலிருந்துகொண்டு
வேல்போன்ற கண்ணாளை விலகியிருக்க மனம்வருமோ ?
சீமாட்டிச் செல்வருக்குச் சேலை பலவுண்டு
காமாட்டிப் பசங்களுக்குக் கந்தை சிலவுண்டு
கழுத்தினிலே பளபளக்குங் கண்டசரமுண்டு
எழுத்தையறிந்தவர்க்கு இங்கிதமாய்ப் பாட்டுண்டு
தூங்குவோரை யெழுப்பித்தூது சொல்லுங் தோகையர்க்கு
வாங்கும்படியான வனச்சரக்குப் பலவுண்டு.

கண்ணன்—மங்கையிடத்தில் நான் காதல் கொள்ளாதிருப்பின், ஒருதம்பிடிகூட செலவுசெய்ய இஷ்டப்படேன்: அவளைத் திருப்தி செய்வதற்குச் சிலரவிக்கைச் சீட்டிகளையும் பாவாடைச்சீட்டிகளையு முன்னிடத்தில் வாங்கிறேன். அந்த மூட்டையில் பாட்டுப் புஸ்தகங்களா ?

மந்தை—எனக்குப் பாட்டுப்புஸ்தகம் வேணும்: வாங்கிக்கொடுத்தால் தானுச்சு.

சுயம்பு—இந்தப்பாட்டைக்கேட்டால் பட்டமரமும் பாலாயுருகும்.

மந்தை—நீர் பாடிக் காட்டுவீரா ?

சுயம்பு—சிறு பெண்கள் கேட்கும்போது பாடாமலிருப்பது புருஷர்களுக்குச் சரியன்று. ஜாவளிகள் பாடுவேன்; லாவணிகள் பாடுவேன்; உங்களுக்கு இஷ்டமானதைச்சொன்னால் என்னாற் கூடியமட்டில் பாடிக்காட்டுகிறேன்.

மந்தை—வியாபாரியைப் பாடச் சொல்லும்.

[சுயம்பு பாடுகிறான்.]

சுயம்பு— ராகம்-சங்கராபரணம்

பல்லவி.

வந்தாளே தேவி—அருமைமந்தை—வந்தாளே தேவி.

அனுபல்லவி.

செந்தாமரைமலர் பூவிலுதித்த மங்கை
சிந்தாமணி ரத்ந சுந்தரிபோலவே— (வந்தாளே)
நக்ஷத்ர மாலையும் நவரத்ன ஓலையும்
நயமாம் பார்வையும் அந்த சொர்ண வடிவுடனே (வந்தாளே)

மந்தை—சீட்டிக்காரய்யா—என்ன பரியாசம் பண்ணுரீங்களே?

சுயம்பு-பெண்களைப்பரியாசம் பண்ணினவன் பேயாய்பிறப்பான்.

கண்ணன்—உமக்குத் தெம்பாங்கு பாடத் தெரியுமா ?

சுயம்பு—நல்லாய் பாடுவேன், ஸாமி. இதோ சொல்லுகிறேன்.

மாதுளம்பூப்பட்டுடுத்தி மதிளோரம் போரபெண்ணே!
சூது ஒன்றுஞ் செய்யாமே சுகித்திருக்க இணங்காயோ!

கண்ணன்—பேஷ் பேஷ் சாமிமேலே பாடுவீரா ?

சுயம்பு—புதுத்தேவாரம் ஒன்று பாடுகிறேன் கேளுங்கள்.

பக்தனைப் பாடமாட்டேன் பரணைமேலேறமாட்டேன்
எதிரே லிறங்கமாட்டேன் என்னை நீ யேய்க்கலாமோ
முற்றின முருங்கக்காயை மோர்க்குழம்பிடவே சொன்னேன்
அத்தையைப் படைக்கச்சொன்னேன் அவள் அகப்பையைக்
காட்டினளே.

அண்ணன்—என் தங்கை கேலிப்பாட்டுக் கூடாதென்று முதலி லேயே சொன்னதை மறந்துபோனீரோ. சாமிமேல் நல்ல பாட்டொன்று பாடி நிறுத்தும்.

சயம்பு—சித்தப்படி செய்கிறேன் ஸாமி.

[ராகம்—பூரிகல்யாணி]

ஈருளிலே யுலகமிருப்பதாதலினால் புரிந்தகாமொருவர்பாற் பலகால்
விளைற் பொருளினிச்சையாற் பலகான் மருவுகின்றனெனக்கருதி
ருவுவாரென நானஞ்சி பெய்விடத்துமேவிலே னெந்தைநீ யறியா
ஈருவுமப் பொருளை நினைத்தபோதெல்லாமுவட்டினேனிதுவுநீ யறிவாய்.

அண்ணன்—இது நல்ல பாட்டுத்தான். அப்பறம் தனியாய் உம் முடைய பாட்டைக் கேட்கிறோம். என் அப்பனும் விருந்தி னர் இரண்டுபேரும் ரகசியம் பேசுகிறார்கள். பாட்டுப்பாடிக் கொண்டிருந்தோமானால் அவர்கள் பேச்சுக்குத் தடையாகும். மூட்டையைத் தூக்கிக்கொண்டு வாரும். செருக்கிகளா, கூட வாருங்கள். உங்களுக்கு வேண்டியவற்றை வாங்கிக்கொ டுத்து மறுவேலை பார்க்கிறேன். வியாபாரி, எனக்கு வேண் டியதெல்லாங் கொடுத்துவிட்டு மற்றவருக்கு நீர் சரக்கு விற்கவேணும்.

சயம்பு—(தனக்குள்ளே) உன் காதை இன்று பறிக்காமற்போனால் என் பேர் சுயம்புவா.

[சுயம்பு—மங்கை—விங்கை—போய் விடுகிறார்கள்.]

ஈவிந்தன்—[சுசீலனை நோக்கி] இடையர்களுடைய பண்டிதை தமக்கு அலுத்துப்போயிருக்கும்.

**சுசீலன்**—அப்படிச் சொல்லலாகாது: வேடிக்கைகளைப் பார்த்து நாங்கள் மிகுந்த ஸந்தோஷத்தையடைந்தோம். [நிருபனைப் பார்த்து] நமது குமாரனும் இடைச்சியும் மிகுந்த நட்புடையவர்களாகஆய்விட்டபடியால், இவ்விருவர்கூட்டுறவைக்கலைக்க வேண்டிய காலம் நெருங்கிவிட்டது. முன்னாலெடுக்கக் கூடியதைக் கோடரிகொண்டு வெட்டுகிறதா? (தருமனைப் பார்த்து) ஐயா கோமுட்டி, இடைப்பெண்ணிடத்தில் அதிக மோகங்கொண்டவராகத் தோன்றுகிறீர். ஜவுளி வியாபாரியிடத்தில் உம்முடைய காதலிக்கு ஒன்றும் வாங்காமல் விட்டீரே. உம்முடைய பொருட்டாய் நான் இந்நகரத்தெருவின் அத்தனை ஜவுளியையும் என் நாயகிக்கு வாங்கிக்கொடுத்து அவள் மனம் குளிரச் செய்வேன். நீர் வாய்ப்பந்தல் போடுகிறவராயிருக்கிறீர்.

**தருமன்**—என் காதலி ஆடை ஆபரணங்களால் திருப்தியடைகிறவளல்ல: அவற்றை அவள் பொருள்பண்ணமாட்டாள். அவள் அந்தரங்க விசுவாசத்தை மாத்திரம் கவனிப்பவள். என் இருதயத்தை அவளுக்குத் தத்தஞ் செய்துவிட்டேன். இன்னும் அதை அவள் வசத்தில் ஒப்புவிக்கவில்லை. பொது மகளிர் தாமே ஆடை ஆபரணங்களையே உயர்த்தியாயெண்ணுவார்கள்.

**சுசீலன்**—இன்னும் வேறு என்ன சொல்லப்போகிறீர்?

**தருமன்**—இங்குள்ள எல்லோரும் அறிய பிரமாணமாகச் சொல்லுகிறேன். எவ்வளவு மேன்மையான சாம்ராஜ்யம் எனக்குக் கிடைத்தாலும் சுமதியினும் அது சிலாக்கியமானதாக என்றெண்ணப்படமாட்டாது. ராஜ்ய லக்ஷ்மியைத் துரும்பாக எண்ணுகிறேன்.

**சுசீலன்**—உமது வாய்க்குச்சர்க்கரைதான் போடவேண்டும்.

**நிருபன்**—வாஸ்தவமான அன்புடையவன் என்று தெரிகிறது.

**கோவிந்தன்**—அம்மா, சுமதி, நீயும் இந்தச் சிறுபிள்ளையிடத்திற் காதல் கொண்டிருக்கிறாயோ?

**சுமதி**—என்னை வரித்த நாயகருடைய மனம் எவ்வாறிரு

கின்றதோ, அவ்வாறுதான் என் மனமும் இருக்கிறது. அதிக மாய்ப்பேச என்னுலாகாது.

ரவிந்தன்—ஈண்பர்களே, உங்களே யாரென்று நானறியமாட்டேன்: ஆயினும் உங்கள் முன்னிலையிலேயே என்பெண் சுமதியை துரைசாமிக்குப் பாணிக்கிரஹணம் செய்விக்கிறேன். சுமதிக்குப் போதுமான ஸ்ரீதனமும் கொடுப்பேன்.

ுமன்—தமது குமாரியே எனக்குப் பெரிய ஸ்ரீதனம். வேறொன்றையும் வேண்டேன். இவர் காண எங்களுக்குக் கலியாணத்தைச் செய்து முடித்தல் வேண்டும்.

ரவிந்தன்—அம்மா, சுமதி, அப்பா, துரைசாமி :— இருவரும் என்கிட்ட வாருங்கள். உங்களிருவருக்கும் பாணிக்கிரஹணம் செய்துவிடுகிறேன்.

சீலன்—(தருமனைப் பார்த்து) சிறுபிள்ளாய், உனக்குப் பிதா உயிரோடிருக்கின்ருரோ ?

நமன்—இருக்கிருர், இருந்தாலென்ன ?

சீலன்—நீ விவாகம் பண்ணிக்கொள்வது அவருக்குத் தெரியுமா?

நமன்—அவருக்குத் தெரியாது! தெரியவேண்டிய அவசியமுமில்லை.

சீலன்—பிள்ளாய்! கலியாணத்தில் பிதாவுக்கு அல்லவோ முதல் மரியாதை செய்தல் உலகத்தாருக்கு வாடிக்கை. பிள்ளை தன் மனத்திற்கொத்த மனைவியைத் தெரிந்தெடுத்துக்கொள்வது நியாயந்தான். வம்சவிருத்தியை விரும்புகிற பிதாவின் அனுமதியைக் கேட்டுச் செய்வதும் யுக்தமாக இருக்கிறது.

ருமன்—நீர் சொல்வது சரிதான். என் கலியாணத்தை என் பிதாவுக்குத் தெரிவிக்காமலே முடித்தற்கு அனேக காரணங்களுண்டு.

சீலன்—அப்படிச் சொல்வது சரியல்ல. உன் பிதாவுக்குச் சமாசாரத்தைத் தெரிவி.

நருமன்—நான் அவருக்குச் சொல்லமாட்டேன்.

சீலன்—கெஞ்சிக்கேட்கிறேன், அப்பா, அவருக்குச் சொல்லத்தான் வேண்டும்.

நருமன்—சும்மா போம்: நான் சொல்லமாட்டேன்.

**கோவிந்தன்**—அய்யா, துரைசாமியாரே, நீர் சொல்வது சரியல்ல. உமது பிதா அறிந்தால் வேண்டாமென்று சொல்லமாட்டார்.

**தருமன்**—அதைப்பற்றி என்னிடத்தில் பேசவேண்டாம்; கலியாணத்தை நடத்திவிடும்.

**சுசீலன்**—[வேஷத்தைக் கலைத்துச் சுசீலனென்று யாவருமறியும்படிச் செய்துகொண்டு] அடா பயலே, கலியாணத்தை நிறுத்தடா, உன்னை என் பிள்ளையென்று சொல்லவும் வெட்கமாயிருக்கிறது. செங்கோ லோச்சப்பிறந்த நீ இடையன் கோலோச்சப் பார்க்கின்றாயோ? நன்றாயிருக்கிறது.

[கோவிந்தனை நோக்கி] அடா கிழவா, நீ சாவது இன்றோ, நாளையோ, உன்னைக் கொலைபுரிவதால் பிரயோஜனமில்லை. உன்னைச் சும்மா விடுவேன்.

[சுமதியைப் பார்த்து] நீ மாயப்பொடிபோட்டு என் பிள்ளையை மோசஞ் செய்திருக்கின்றாய். முள்ளைக்கொண்டு உன் முகத்தைப்பிராண்டி உன் அழகைக் குலைத்துவிடுகிறேன், பார். தளுக்குப்பண்ணி எல்லாரையும் ஏமாற்றிக்கொண்டிருக்கிறாயா?

[தருமனைப் பார்த்து] இந்த இடைச்சி வீட்டில் இனிக்காலடி வைப்பையாயின், உனக்கு ராஜ்யமில்லாமற் செய்து விடுவேன். உன்னைப் பிள்ளையாகவும் ஒத்துக்கொள்ளமாட்டே னென்றறியக் கடவாய். நம்முடன் அரண்மனைக்கு வா.

[சுமதியை நோக்கி] ஈனசாதிச் செருக்கி, என் குமாரனை உன் வீட்டிற்கு வர இடங்கொடுத்தாலும் அவனைக் கட்டியணையவினைத்தாலும் உன் தலையை உடனே வாங்கிப்போடுவேன், பத்ரம், பத்ரம்.

**சுமதி**—எங்கள் நட்பு இவ்வாறழிந்ததா! தெய்வமே! பேசுவதற்கு நான் பயப்படவில்லை. இரண்டு மூன்றுதரம் பேச வாயெடுத்தேன். அரண்மனையிலொளிக்கின்ற சூரியன் ஏழையின் குடிசையில் பிரகாசிக்கமாட்டான் போலும். அது நிற்க:—

[தருமனைப்பார்த்து] நாதா, தமது பிதாவின் சொற்படி கேளும். நான் தொடக்கத்திலேயே தமக்குச் சொன்னவாறு தானாயிற்று. தமது பெருமையை அழித்தலாகாது. பட்டமஹி

கதிப் பதவியை மறந்து பசுக்கறக்கப்போகின்றேன். என் விதி இப்படியாயிற்று. "நிதியுங் கணவனு நேர்படினுந் தந்தம் விதியின் பயனே பயன்" என்ற ஔவை வாக்கு வீண்போதலில்லை.

**தருமன்**—சுமதி, என்ன துக்கமாயிருக்கிறாயே! பயம் வேண்டாம். நமது விவாகமுகூர்த்தம் தேதி ஒத்திவைத்திருக்கிறதாக நினைக்க வேண்டுமேயன்றி நின்று போய்விட்டதென்று எண்ணாதே. உன்னைத் தவிர்த்து வேறு ஒருவரையும் நான் மணம் புரிதலில்லையென்று செய்த சபதம் சபதமே. என்னை அஞ்சாமல் நிமிர்ந்து பார்.

[சுசீலனை நோக்கி] பிதாவே, உம்முடைய ராஜ்யலக்ஷ்மியை நான் விரும்பவில்லை. நான் விரும்பிய பொருளாகிய பிரத்யக்ஷ லக்ஷ்மி சுமதியை எந்தக்கேடு வந்தாலுங் கைவிடேன். இது சத்தியம், சத்தியம்.

**நிருபன்**—நான் சொல்லும் ஒரு வார்த்தையைத் தாம் கேட்டல் வேண்டும்.

**தருமன்**—என் காதலே எனக்கு மந்திரி: அது சொன்னபடி நடப்பேனே ஒழியப் பிறர்சொல் என் காதில் ஏறாது. என்னைப் பித்தனென்பீராயின் அப்படியே எண்ணிக்கொள்ளும். அதனால் நான் அவமானமடையேன்.

**நிருபன்**—முற்றிப்போன விஷயமாய்விட்டது.

**தருமன்**—எப்படி இஷ்டமோ அப்படி நினைத்துக்கொள்ளும். சூரிய சந்திரர்கள் தெற்கு வடக்காயுதித்திடினும் நான் சுமதிக்கு வாக்களித்தபடித்தான் செய்வேன். அரசுரிமை எனக்குச் செல்வமில்லை. சுமதியே எனக்குப் பெருந்திரவியம். நான் என் பிதா முகத்தில் இனி விழிப்பதில்லை. நீர் அவருக்கு உசிதமான மந்திரியாயிருக்கின்றமையால் நான் சொன்னவற்றை அவரிடத்தில் தெரியப்படுத்தும். என் தலையெழுத்துப்படி எல்லாம் நடக்கும். நல்ல வேளையாக நானும் என் காதலியும் இந்த நாட்டைத் துறந்து போதலுக்கு இந்தச் சமயம் நல்ல வாகனங்கள் கிடைத்திருக்கின்றன. நான் போகும் ஊர் உமக்குத் தெரிய வேண்டியதுமில்லை: அதை உமக்கு நான் சொல்லப் போகிறதுமில்லை.

**நிருபன்**—நீர் முன்போலப் பிடிவாதஞ் செய்யாமல் நான் சொல்லுஞ் சில வார்த்தைகளைக் கேட்பீராயின் நலமாயிருக்கும்.

**தருமன்**—பெண்ணே, சுமதி, நான் சொல்வதைக் கவனித்துக் கேள், [நிருபனை நோக்கி] தாம் சொல்வதைச் சற்று நேரஞ் சென்று கேட்கின்றேன்.

**நிருபன்**—இந்தச் சிறுவனுடைய மன உறுதியை மாற்றுதல் சாத்தியமன்று. இவனை வியாஜ்யமாக வைத்துக்கொண்டு நாமும் சேதி நாட்டிற்குப்போனால் நலமாயிருக்கும். மச்சரனைப்பார்க்க மிகவும் தாகமுள்ளவனாயிருக்கிறேன்.

**தருமன்**—நிருபரே, காரியமிருக்கிறது. நான் செல்லுகின்றேன், தாம் சொல்வதைக் கேட்காமற் போகும் என்னை மன்னிக்க வேண்டும்.

**நிருபன்**—எந்த ஊருக்குப் போவதாகத் தாம் தீர்மானித்திருக்கின்றீர்?

**தருமன்**—தெய்வம் விட்டவழிதான். அது எங்கு கொண்டு விடுமோ அங்கு விடட்டும்.

**நிருபன்**—நான் சொல்வதைக்கேளும்: நீர் பரதேசம் போகிறது உறுதியாயிருக்குமாயின், சேதிநாட்டிற்குச்செல்லுதல் உத்தமம். மச்சரனிடத்தில் உம்மை ராஜகுமாரனாகவும் சுமதியை ஒரு ராஜகுமாரியாகவும் சொல்லிக்கொள்ளலாகும். ராஜகுமாரிக்குடைய ஆடைகளைப்போட்டு விட்டோமாயின் சுமதியின் தோற்றம் ராஜகுமாரியின் தோற்றத்தைப் போலிருக்குமென்பது நிச்சயம். அப்போது சுமதி உமக்கேற்ற பத்னியாக விருப்பாள். மச்சரன் நம்மைக் கண்டால் ஆனந்தமடைவாரென்பதில் ஐயமேயில்லை. உமது பிதாவுக்குச் செய்ய நினைத்த கேட்டுக்காக உம்மையே மன்னிப்புக் கேட்பார். நம்மிடத்தில் அவருக்கு நாளுக்கு நாள் அன்பு மிகும்.

**தருமன்**—மச்சரன் நான் வந்ததற்குக் காரணத்தைக் கேட்டால் என்ன மறுமொழி சொல்வேன்.

**நிருபன்**—இதில் என்ன கஷ்டமிருக்கிறது? மச்சரனுக்கு உபசாரஞ் சொல்லவும் ஆறுதல் செய்யவும் உமது பிதா அனுப்பினாரென்று சொல்லவேண்டும். நீர் மச்சரனிடத்தில் நடக்க

வேண்டிய மாதிரியை உமக்கு முன்னாலேயே எழுதிக் கொடுத்து உருட்போட்டு வைத்துவிடுகிறேன். நம்முடைய மருமத்தை மச்சான் அறியாமலிருக்கும்படி செய்துவிடலாம். அவரும் நம்மிடத்தி லொன்றையும் ஒளிக்கமாட்டார்.

**தருமன்**—நீர் சொல்லுகின்ற உபாயத்திற்காக உமக்கு வந்தனம். இதில் ஸாரமிருக்கின்றது.

**நிருபன்**—முன்பின் தெரியாத நாட்டிற் சென்று மனம் வருந்துவதைவிட நான் சொல்லுமுபாயமே உனக்கு நன்மை பயக்கும். "இல்லானை இல்லாளும் வேண்டாள்" என்பதை யறிய வேண்டும். ஓருயிரும் இரண்டுடலும் போன்ற தம்பதிகளும் வறுமையால் ஒருவரை ஒருவர் வெறுப்பார்.

**தருமன்**—செல்வமுடைமை முகத்தில் களிப்பை யுண்டாக்கும். கஷ்டம் முகத்தை வாடச்செய்யுமே யன்றி மனத்தைக் கோணச் செய்யாது.

**நிருபன்**—தாம் சொல்லுகிற இயல்புடையவர் இனிப் பிறத்தல் வேண்டும். உலக இயற்கை யறியாமல் சொல்லுகின்றீர்.

**தருமன்**—குலத்தில் எனக்குக் குறைந்தவளாயினும், சுமதி அறிவிலு மொழுக்கத்திலும் நிறைந்தவள்தான்.

**நிருபன்**—சுமதி மற்றவருக்குக் கற்பிக்கும் நிலைமையி லிருக்கின்றாளே யல்லாமல் பிறரிடத்தில் அவள் அறிய வேண்டுவதொன்றுமில்லை.

**சுமதி**—என்னைப் போன்ற ஒன்றுமறியாத பேதையைத் தாம் புகழ்வது எனக்கு வெட்கமாயிருக்கின்றது.

**தருமன்**—சுமதி, என் கண்ணே, இங்கிருப்பது முள்ளின்மேல் நிற்பது போலிருக்கிறது. ஐயா நிருபரே, நீர் என் பிதாவின் உயிரைக் காப்பாற்றி என் குலத்துக்கு ஒரு ஸஞ்சீவியா யிருக்கின்றீர். ராஜரீகச் சின்னங்கள் ஒன்றுமில்லாமல் சேதிநாட்டி லெவ்வாறு வரலாம்?

**நிருபன்**—அந்தக்கவலை உமக்கேன்? என் ஆஸ்தி முழுவதும் சேதிநாட்டிற்றானே இருக்கின்றது. ஆயிரம் அரசர்க்கு வேண்

டிய ஆடை ஆபரணாதிகளையும் சேகரிக்க என்னாலாகும்; உம க்கு ஒரு ரகசியம் சொல்லுகின்றேன். [நிருபனும் தரும னும் காதோடு பேசிக்கொள்ளுகின்றார்கள்.]

(பிரவேசம்—சுயம்பு முடிச்சுமாறி.)

**சுயம்பு**—நாணயம் என்றும், நம்பிக்கை என்றும் இரண்டு ஸகோதரர்கள் உலகிலிருக்கிறார்கள். இவர்களிருவரும் பிழைக்கும் வழி யறியாத மூடர்கள். இவர்களை நம்பினால் சோறு **மாத்தூச் சோறு தான்.** இவர்கள் உறவை நீக்கின பிறகுதான் நான் ஆண்பிள்ளையானேன். இன்றையதினம் இளிச்சவா யிடையன் கழுத்தில் என்னிடத்திலிருந்த அஜாடி பிஜாடி சரக்குகளை யெல்லாங்கட்டி, விலை ஒன்று பத்தாகச் சொல்லிப் பணத்தைப் பறித்துப் பையை நிரப்பினேன். யோக்கியனாயிருந்தால் என் வயிறு காயவேண்டியதுதான். நாய்விற்ற காசென்று குரைத்துக் காட்டுமோ? இம்மட்டா! பயல்களும் செருக்கிகளும் பெண்பிள்ளை பாட்டைக் கேட்டு மயங்கி இருக்குஞ் சமயம் பார்த்துக் கழுத்துத் தாலியையும் கத்தரித்துக் கொண்டுவிட்டேன். ஆஷாடபூதிகள் தான் உலகத்தில் சுகமாக இருப்பார்கள். இன்றைக்கு எனக்குச் சக்கப்போடு. இன்னும் ஆறுமாசம் திருட்டுத்தொழிலை நான் செய்யவேண்டுவதில்லை. கிழக்கோனுக்கும் அரசனுக்கும் வழக்கு வந்தபடியாலல்லவோ சிலபேர் என் கைதப்பிப் போய்விட்டார். இல்லாவிட்டால் எல்லாருடைய தலையையுந் தடவியிருப்பேன்.

(பிரவேசம்—நிருபன்—தருமன்—சுமதி)

**நிருபன்**—நீர் சேதிநாட்டிற்போய்ச் சேரு முன்னமேயே, என் கடிதங்கள் அரசனிடத்திற் கொடுக்கப்படும். உமக்கு ஒரு விதமான துன்பமு மிராது.

**தருமன்**—மச்சரன் என் பிதாவுக்கு எழுதுங் கடிதங்களால்,

**நிருபன்**—ஸந்தேக நிவிருத்தியாகும். உமது பிதாவும் கோபந் தணிவார்.

**சுமதி**—நிருபரே, நீரே எமக்குப் பிரத்யக்ஷ தெய்வம். உம்மால் பெரிய ஆபத்தினின்று இன்று விடுபட்டோம்.

நமன்—(சுயம்புவைக் கண்டு) இங்கு ஒரு ஆள் நிற்கின்றானே, இவனைக்கொண்டு நம்முடைய காரியங்கள் சிலவற்றைச் சாதித்துக் கொள்ளலாம், வல்லவனுக்குப் புல்லுமோ ராயுதமன்றோ?

சுயம்பு—(தனக்குள்ளே) நான் பிதற்றினவற்றை இவர் கேட்டிருந்தால் தலைக்கல்லவோ வரும்.

நமன்—நீயேன் நடுங்குகின்றாய்? உனக்குக் கேடு ஒன்றும் நாங்கள் செய்யோம். தைரியமாயிரு.

சுயம்பு—நான் ஒரு ஏழைப்பயல், ஸாமி.

நமன்—உன் ஏழ்மையை நீயே வைத்துக்கொள்; நாங்கள் அதை உன்னிடமிருந்து அபகரிக்கிறதாக உத்தேசமில்லை. உன் உடுப்பைக் கழற்றி என்னிடத்திற் கொடுத்து என்னுடுப்பை வாங்கிக்கொள். உன் வெளித்தோற்ற மாத்திரம் மாறும்; உனக்கு வேறு லாபத்தையும் பண்ணுகின்றோம்.

சுயம்பு—நான் ஏழையாயிற்றே, ஸாமி! [தனக்குள்ளே] உங்களை நான் நன்றாயறிவேனே.

நமன்—தாமஸம் பண்ணாதே! என்னுடனிருப்பவர் உடைகளைக் கழற்றிவிட்டார், உனக்குத் தெரியவில்லையா?

சுயம்பு—நிஜமாய்த்தான் சொல்லுகிறீர்களோ, ஸாமி. [தனக்குள்ளே] இவர் பண்ணுகிற தந்திரத்தை நானறிவேன்.

நமன்—ஜல்தி பண்ணு.

சுயம்பு—பீற்றல் சட்டையைக் கொடுத்து நல்லதை வாங்கிக் கொள்ள மனம் வரவில்லை, ஸாமி.

நமன்—கழற்றுகிறையா, இல்லையா, [தருமன் உடுப்பைச் சுயம்புவும் சுயம்பு உடுப்பைத் தருமனும் போட்டுக்கொள்ளுகிறார்கள்]. பெண்ணே சுமதி உன் நாயகனுடைய தலைப்பாகையைப் போட்டுக்கொண்டு அதோ இருக்குந்தோப்பில் சற்று ஒளித்திரு. முகத்தை நன்றாய் மூடிக்கொள். உன் நிஜரூபம் மாறுதற்கு எவ்வளவு செய்யவேண்டுமோ அவ்வளவையுஞ் செய்துகொள். உன் மேலேயே அனேகர் கண்ணாயிருக்கின்றார்கள். வாகனங்கள் தயாராயிருக்குமிடத்திற்குப் போய்ச் சேருதல் வேண்டும்.

**கோவிந்தன்**—நான்ஒண்ணு சொல்ரேன், அதைக் கேளு.

**கண்ணன்**—சாடிபத்தி எரியச்சேபுகைச்சுருட்டுக்குநெருப்புக்கேக் காதுபோலிருக்கிறது நீ பேசுவது. தங்கச்சி ஒம்மவளல்ல என்னூட்டா ஒம்மவனுக்கும் ஒனக்கும் என்ன கேடுவரும்? யசந்து சாருயே! தங்கச்சியைக்காட்டிலிருந்து கொண்டாரச்சே அவ பக்கத்தில் வைச்சிருந்த பொட்டி மூட்டை எல்லாத்தையும் ராசா எடத்தில் காட்டிப்புட்டா நம்மை என்ன பண்ணலாம்?

**கோவிந்தன்**—நல்லாய்ச் சொன்னே, தம்பி! நாம் போய் எல்லாத்தையுஞ்சொல்லிடுவோம்: அதான் தப்பாவழி; மவராசா நமக்குச் சம்மந்தியாரது எங்கே கடக்கு.

**சுயம்பு**—(தனக்குள்ளே) இவர்களிருவரும் பேசிக்கொள்வதைப் பார்த்தால் குட்டிராசா தப்பி ஓடமுடியாமற் போய்விடுமோ?

**கண்ணன்**—அரண்மனைக்குப் போவம் வா.

**சுயம்பு**—( தனக்குள்ளே ) நானும் சிறிது நல்லவனுகிறேன். [பொய்த்தாடி கட்டிக்கொண்டிருந்ததை எடுத்துப்போட்டு], ஏ, குப்பைக்காட்டான்களா, எங்கே போகிறீர்கள்?

**கோவிந்தன்**—ராசா அரமனைக்குப் போரேஞ் சாமியாரே.

**சுயம்பு**—அரண்மனையில் உங்களுக்கு என்னவேலை? உங்களுடைய ஊர், பேர், தொழில், வயது, முதலானவற்றைச சொல்லுங்கள். பொய் சொன்னீர்களோ செத்தீர்கள்.

**கோவிந்தன்**—அரமனையிலே ஒங்களுக்கு உத்யோகமோ, சாமியாரே!

**சுயம்பு**—என் வேஷத்தைப்பார்த்தாலே தெரியவில்லையா உனக்கு: நமக்கு அரண்மனைவேலைதான். நாமாகப்பார்த்து வைத்தால் குடுமி, சரைத்தால் மொட்டை. மஹாராஜா நம்முடைய வார்த்தைக்கு இரண்டு சொல்லுகிறதில்லை. நீ என்ன சொல்லிக்கொள்ள வேண்டும்?

**கோவிந்தன்**—ராசாவிடத்திலல்லவா நான் பேசவேண்டியிருக்கு.

**சுயம்பு**—உனக்கு வக்கீல் யாராவது இருக்கிறார்களா?

**கோவிந்தன்**—கலம் வைச்சிருக்கிறவர்ளுக்கல்ல வைக்கல். எனக்கு வைக்கலே கிடையாது. மேயரத்துக்கு ஆட்டையும மாட்டையும் ஓட்டிக்கொண்டு போவோம்.

**கண்ணன்**—இந்த அய்யா அரமனையில் பெரிய வேலை பண்றவங்க போலருக்கு, அடபா!

**கோவிந்தன்**—அவங்க மூட்டையையும் மூண்டாசையும் பாத்தாலே தெரியலியில்லையா ஒனக்கு: மூட்டைப் பொத்தாம் மினோனு பாரேன்.

**சுயம்பு**—நாம் கேட்டதற்கு ஜவாப் ஒன்றுஞ் சொல்லாமல் ஆடு திருடின கள்ளன் போல் விழிக்கின்றீர்களே! கையிலுள்ள மூட்டையில் என்ன இருக்கிறது? பெட்டியில் என்ன?

**கோவிந்தன்**—மூட்டையிலேயும் பெட்டியிலேயும் இருக்கிறதை ராசாவுக்கு மாத்திரஞ்சொல்லலாம். ராசாவிடத்தில் ஒரு வார்த்தை பேசக்கூடுமானால் நல்லது.

**சுயம்பு**—வீணில் ஏன் கஷ்டப்படுகிறாய், கிழவா;

**கோவிந்தன்**—எஞ்சாமியாரே! வீணுங்கிறீங்கோ?

**சுயம்பு**—நம்முடைய ராசாவுக்குப்பெரிய துக்கம் வந்திருக்கிறது. கப்பலேறிக் காற்று வாங்கவும் அதனால் விசனத்தை மாற்றவும் போயிருக்கின்றார். அவர் அரண்மனையில் இல்லை.

**கோவிந்தன்**—இளையராசா இடைச்சியைக் கண்ணாலம் பண்ணிக் கொண்டாரெண்ணு ராசாவுக்குக் கோவமாம்.

**சுயம்பு**—இடையன் ஊரைவிட்டு ஓடினானே பிழைத்தான். இன்றேல், அவனை அரசன் சித்திரவதை செய்ய இருக்கிறார்.

**கண்ணன்**—இதைச் சொன்னீங்களே, சாமி, ஒங்களைக்கும்பிடறேன்.

**சுயம்பு**—இடையனுக்கு மாத்திரம் தண்டனை யென்று நினைக்காதே; அவனைச்சேர்ந்த பந்துக்கள் ஐம்பது தலைமுறை வரையிலுள்ளவர்கள் எல்லோரையும் நமது அரசன் கழுவிலேற்றி விடுகிறதாக எண்ணியிருக்கிறார். இடைப்பயல் ராஜாபிள்ளையை மாப்பிள்ளையாக அடைகிறதா? இது என்ன விபரீதம்!

**கண்ணன்**—கிழ இடையனுக்குப் பிள்ளையிருக்கிறது உனக்குத் தெரியுமா?

**சுயம்பு**—தெரியும்: அந்தக் காளைக்குப் புதிய விதமான தண்டனை செய்ய அரசன் உத்தேசித்திருக்கிறார். அவனை உயிரோடு

சதையை உரித்துப்போடுவார். அது இருக்கட்டும்: அரசனி டத்தில் உனக்கு என்ன காரியம்? சொல்வாயானால் நம்மால் கூடியமட்டில் சிபார்சு செய்யமுடியும். ஒன்றையு மொளிக் காமல் சொல்லிவிடு.

மணான்—அப்பா, நான் ஒன்று சொல்லேன், கேளு. இவங்கள் பெரிய அதிகாரம் படைச்சவங்க. இவங்களுக்கு பணத்தைக் கொடுத்து உசிரைக் காப்பாத்திக்கொள்ளணும். மவராசா நினைச்சிருக்கிறதைக் கேட்டா உடம்பு நடுங்குதே.

ரவிந்தன்—சாமிகளே, இந்த ரூபாயை வாங்கிக்கொள்ளுங்க. காரியம் ஆனபிறகு இன்னும் இத்தனை ரூபாய் கொடுக்கி றேன். எங்களையினே வேணுமின்னு பொணையாவைக்கறேன்.

ரம்பு—பாதிப்பணத்தை இப்போது கொடுத்துவிடு. [கண்ணனை நோக்கி] உனக்கு இந்தவிஷயத்தில்ஏதாவது சம்பந்தமுண்டா?

மணான்—உண்டு சாமிகளே, ஏதாவது பண்ணி எங்களை உசி ரோடே விட்டுடுங்க. அது போதும்.

ரம்பு—இடையன் மகன் கேலா தெரியவேண்டும்? அந்தபயல தப்புவது துர்லபம், வலது பக்கமாய்த் திரும்பிப்போ : கடற் கரையோரத்தில் நான் உன்னை வந்து பார்க்கிறேன்.

ரவிந்தன்—ஐயனாரப்பனல்லவோ இவங்களை இங்கே கொண்டு விட்டார். இல்லாவிட்டா நாம் பிழைக்கிறது எது?

ரம்பு—நாணயமாக நடக்கவேண்டும் என்று நான் நினைத்தா லும் தெய்வம் வழிவிடவில்லை. இந்த இரண்டு மூடர்களையும் அரசனிடத்தில் அழைத்துப்போவதிற் பிரயோஜனமில்லை. இளவரசனிடத்தில் அழைத்துப்போனால் நலமாயிருக்கும். அவர் எனக்குச் செய்திருக்கிற உபகாரங்களுக்குப் பிரதியுப காரஞ் செய்ததாகும். வேண்டுமானால் இளவரசன் என்னைத் துஷ்டனென்று சொல்லட்டும். அதனால் எனக்கு யோக்கி யதை குறைந்து போகாது.

---

# ஸ்ரீநந்தாமங்கம்.

## முதற்களம்.

---

சேதி நாடு—மச்சரன் சபாமண்டபம்.

பிரவேசம்—மச்சரன், நியமன், தவன், புனிதை வேறுசிலர்.

நியமன்—மஹாராஜனே, தாம் செய்த பாவத்திற்குப் போதுமான ப்ராயச்சித்தங்கள் செய்யப்பட்டன. தம்மிடத்தில் சொல்லக் கூடிய குற்றம் ஒன்றுமில்லை. தேவர்கள் செய்வதுபோலக் குணத்தை கிரஹித்துக் குற்றத்தை மறந்துவிடுங்கள். தாம் பாபஞ் செய்ததாகவே எண்ணலாகாது.

மச்சரன்—நீ சொல்வது சரிதான். தோஷமேயில்லாத என்மனைவியை நான் படுத்தாதபாடு படுத்தி வைத்தேனே. தீயினுற் சுட்ட புண்ணுள்ளாறும் ஆறாதே நாவினுற் சுட்ட வடு. என் குற்றத்தை நான் மறத்தல் முடியாத காரியமாயிருக்கிறது. நான் செய்த பாவத்தால் நாடு அராஜகமாயிற்று. மனமொத்தமனைவியைத் துறந்த பாவிக்குச் சுகமுண்டாகுமோ?

புனிதை—அரசே, உலகிலுள்ள ஸ்திரீகள் ஒவ்வொருவரிடத்திலும் இருக்கிற நற்குணங்களை யெல்லா மொன்றுசேர்த்து ஒரு பெண் வடிவமாக்கி உமக்கு வாழ்க்கைப் படுத்தினும் அப்பெண் உம்மால் பிராணவியோகமடைந்த சாந்தியின் கால் தூளிக்குச் சமானமாகாள்.

மச்சரன்—நீ சொல்வதுவாஸ்தவமே. சாந்தியை நான் கொன்றேனென்று நீ சொல்லும்போது புண்ணிற் கோலிடுவதுபோலிருக்கிறது. அவ்வாறு இனிச் சொல்ல வேண்டாமென்று கோருகிறேன்.

**பமன்**—ரமணி, நீ இவ்வாறு சொல்வது உசிதமல்ல. புண்பட்ட மனத்துக்கு ஆறுதல் மருந்தைக் கொடுக்க வேண்டுமேயன்றி, வலியை அதிகரிக்கச் செய்யலாகாது.

**னிதை**—மஹாராஜாவுக்குப் புனர்விவாகம் பண்ணிவைக்க நினைக்கிறதுபோல் தோற்றுகிறது.

**வன்**—உனக்குத் தெரியாத விஷயமன்று. நமது அரசன் ஸந்ததியில்லாமற் போனதை அறிந்து சத்துருக்கள் களிகூர்ந்து கொண்டிருக்கிறார்கள். நமது நாட்டைச் சத்துருக்கள் கைப்பற்ற இடங்கொடுக்கலாமா? தேசம் சீரழிந்துபோகும்.

**ச்சரன்**—புனிதா, சாந்தி உன் மனத்திலிருந்து என்றும் நீங்காதவளென்று நானறிவேன். உன் வார்த்தையைக் கேட்டிருந்தேனாயின் எனக்குத் துக்கமே வந்திராது. சாந்தி உயிரோடிருந்து என் மனத்தைப் பூரித்துக்கொண்டிருப்பாள்.

**னிதை**—அவ்வாறாயின் உம்மிலும் பாக்கியவான் உலகிலொருவருமிருக்கமாட்டார்.

**சரன்**—வாஸ்தவம். சாந்தியைப்போன்ற மனைவி கிடைப்பது துர்லபம். ஆதலின் நான் பின்னும் கல்யாணஞ் செய்யப்போகிறதில்லை.

**னிதை**—நான் அனுமதி தந்தாலல்லாமல் வேறு பெண்ணைத் தாம் மணப்பதில்லையென்று பிரமாணஞ் செய்வீரா?

**ச்சரன்**—அப்படியே சத்தியம்.

**னிதை**—சபையோரே, மஹாராஜா சொன்னதற்கு நீங்களே சாக்ஷிகள்.

**மன்**—மஹாராஜாவை நீ சோதிக்கின்றாயே.

**னிதை**—சாந்தி படத்தில் எப்படித் தோன்றுகிறாளோ அவ்வாறே யிருக்கும் பெண் அகப்பட்டால் மஹாராஜா கல்யாணம் செய்துகொள்ளலாம்.

**மன்**—என்ன, ஓட ஓட வெருட்டுகின்றாயே.

**னிதை**—மஹாராஜா இளையாளொருத்தியை மணம்புரிதல் அவசியமாயின் நான் சொல்வதொன்றுண்டு. நானே பெண் பார்த்

துவரவேண்டும். தாந்தியை முதலில் கலியாணஞ் செய்துகொண்ட காலத்தில் அவள் என்னவயதுள்ளவளாயிருந்தாளோ அதைவிட வயதில் முதிர்ந்தபெண்ணா யிருத்தல்வேண்டும். தாந்தியே இப்போது உயிரோடிருப்பின் எப்படியிருப்பாளோ அப்படியுள்ள பெண்ணைத்தான் மஹாராஜா கலியாணஞ் செய்துகொள்ள நான் சம்மதிப்பேன்.

**மச்சரன்**—நீ சம்மதித்தா லல்லாமல் நாம் புனர்விவாகஞ் செய்து கொள்வதில்லை.

**புனிதை**—தமது முதல் மனைவி உயிர்த்துவந்தாலொழிய தமக்கு எக்காலத்தும் கலியாணங் கிடையாது.

[ஒரு பிரபுவின் பிரவேசம்]

**பிரபு**—மஹாராஜாவே, சுசீலருடைய புத்திரராம். அவர் பெயர் தருமனாம். அவருடன் அழகில் ரதிபோன்ற ஒருசிறு பெண்ணுமிருக்கிறாள். அவளும் ஒரு ராஜபுத்திரியாம். தமது ஸன்னிதிக்கு வரலாமாவென்று கேட்கிறார்கள்.

**மச்சரன்**—இவர் வரவு ராஜகுமாரர் வருகைபோல ஆடம்பரமொன்று மில்லாமலிருக்கின்றதே. ஆபத்தினால் வந்தவர்கள் போல் தோற்றுகின்றது. அவருடன் பரிவாரங்கள் வந்திருக்கின்றனவோ?

**பிரபு**—பரிவாரம் மிகவுஞ் சிலராயிருக்கின்றனர். அவர்கள் தோற்றமும் ராஜரீகமாகவில்லை.

**மச்சரன்**—அவருடன் ராஜகுமாரி வந்திருப்பதாகவா சொன்னீர்?

**பிரபு**—பூலோகத்தில் அத்தனை அழகுள்ள பெண்ணை எவருங் கண்டதில்லை.

**மச்சரன்**—இருந்தபடியிருக்கட்டும்: எத்தனையோ புதுமைகளில் இதுவொன்று. நியமா, நீயும் இன்னும் சிலரும் போய் ராஜகுமாரனை எதிர்கொண்டு அழைத்து நமது ஸன்னிதிக்கு வாருங்கள்.

[நியமன் முதலானோர் சபையைவிட்டுப் போய்விடுகிறார்கள்]

சுசீலனுடைய குமாரன் திடீரென்று இங்கு வருவதற்குக் காரணம் யாதோ?

**புனிதை**—தமதுகுமாரன்பூரணன் ஜீவந்தராயிருந்தால் இருவரும்

ஒரே ஜோடியாயிருப்பார்கள். ஒருமாதம் முன்பின்னதாகப் பிறந்தவர்களல்லவா.

ச்சரன்—என் குமாரனைப்பற்றிப் பேசுவதினால் எனக்குத் துக்கம் அதிகரிக்கின்றது, பூரணன் இன்னொருதரம் இறந்து போனதாகப் புத்தியிற்படுகின்றது. சொந்த பேச்சை என் பேசவேண்டும். தருமன் முதலானோர் அதோவருகின்றார்கள்.

[பிரவேசம்—தருமன், சுமதி, பிரபுக்கள், வேறு சிலர்,]

ராஜபுத்ரரே, உமது வரவு நல்வரவாகுக. உத்தமியாகிய மது மாதா தன் பர்த்தாவைப்போன்றபிள்ளையைப்பெற்றுக்கொத்திருக்கிறாள். இருபத்தோராவது வயதில் உமதுபிதா உம்மைப் பாலமேல இருந்தார். நானும் உம்மை உமது பிதாவென்றெண்ணி று பிராயத்துக்குரிய வேடிக்கைப்பேச்சுகள் பேச எண்ணுகிறன். இப்படி ஒரே அச்சாகப் பிள்ளைகள் அமைவார்களோ? உம் டன்கூட இருப்பவள் ராஜகுமாரியா? தேவதை என்றல்லவோ சால்லுதல்வேண்டும். இத்துணை அழகுள்ள பெண்ணைக் கடவுள் தற்குமுன் படைத்தாரில்லை. உருவத்திலும்அழகிலும்உங்களைப் பான்றவர்களாய் ஒரு பெண்ணும் பிள்ளையு மெனக்கிருந்தனர். வ்விருவரையு மிழந்தேன். அம்மட்டா, உமது பிதாவின் நட்பை மிழந்தபாவிநான். என்னுடலில் உயிர் ஆடிக்கொண்டிருக்கையிற் னே உமது பிதாவைத் தரிசிக்க ஆவலுடையவனாயிருக்கிறேன்.

ருமன்—என் பிதாவின் உத்திரவை அனுசரித்துத்தான் இங்கு வந்தேன். தமக்கு உபசாரங்கள் சொல்லும்படி என்னை யனுப்பியிருக்கின்றார். தமக்கிருப்பதுபோலவே, தம்மைத் தரிசிக்க மிகுந்த அவாவுள்ளவராய் என் பிதாவுமிருக்கின்றார். ஜரைக்கு இயல்பாயுள்ள பலவீனத்தால் மனோரதம் நிறைவேற்ற முடியவில்லையென்று கவலை கொண்டவரா யிருக்கின்றார். தம்மிடத்து என் பிதா வைத்திருக்கும் அன்பினளவு வேறு அரசரொருவரிடத்திலும் வைத்தாரில்லை என்பது நிச்சயமென்று தாம் நம்புதல் வேண்டும்.

**மச்சராஜர்**—இத்தனை அன்பினுக்கு நான் பாத்திரனன்று. சுசீலனைக் கொல்ல நினைத்த பாவியல்லவோ நான். உத்தம புருஷனானமையால் சுசீலன் என் குற்றத்தை முற்றிலும் நினைத்தானில்லை. அஃதிருக்கட்டும்.

அருமைத்தருமா, நீ இந்த வசந்தகாலம் பிறந்தது போலிருக்கின்றது. என் மனத்தைக் குளிர்வித்தாய். அதோ நிற்கும் கோமளமான தேவியைக் கருங்கடலில் அனுப்ப உனது பிதா எப்படித்தான் சம்மதித்தாரோ?

**தருமன்**—என் காதலி, லிபியாவினின்று வந்திருக்கின்றாள்.

**மச்சராஜர்**—பீடாலன் என்றும் உன் நாட்டிலிருந்தா?

**தருமன்**—ஆம், மஹாராஜ்! அனுகூலமான காற்று வீச, உமது துறையில் வந்திறங்கினேன். பரிவாரஜனங்களைக் கப்பலிலேயே திருப்பவும் அனுப்பிவிட்டேன். பிதாவின் கட்டளையை நிறைவேற்ற [illegible] வந்துள்ளேன். நானும் என் பத்னியும் தமது ராஜ்யத்தில் க்ஷேமமாய வந்து சேர்ந்துவிட்டோம். இனி எங்களுக்குக் குறைவு ஒன்றுமில்லை.

**மச்சராஜர்**—உன் பிதா ஈசுர கடாக்ஷம் பெற்றவரென்பதை அறியாமல் அவருக்கு நான் கேடு நினைத்தேன். கேடுநினைப்பான் கெடுவானன்றோ? கடவுள் கோபத்திற்கு நான் பாத்திரனாகி வம்சமிழந்தேன். தருமமார்க்கத்தைக் கைவிடாமலிருந்தேனாயின் உன்னைப்போன்ற பிள்ளை ஒருவனையும் உன் பத்னியைப்போன்ற பெண்ணையும் இந்த நிமிஷம் உடையவனாயிருந்திருப்பேன்.

பிரவேசம்—பிரபு (ஒருவர்).

**பிரபு**—மஹாராஜ், மத்ஸ்ய தேசத்தரசர் நேரில் வந்திருப்பதாகத் தமக்கு அறிக்கை செய்யக் கட்டளையிட்டார். அவர் குமாரன் ஒரு இடைப்பெண்ணை மணந்து தன்வருதி மீறி நடந்து உமது நாட்டில் வந்திருப்பவனைப் பிடித்து வைக்கும்படி கேட்டுக்கொள்ளுகின்றார்.

**மச்சராஜர்**—மத்ஸ்ய நாட்டரசர் எங்கு வந்திருக்கிறார்?

ரேடபு—இவ்வூருக்கே வந்திருக்கின்றார், மஹாராஜ். அவர் ஸன்னி
தியிலிருந்தே நான் வந்துளேன். அவர் குமாரனாகிய இங்கு
நிற்கும் இளவரசனையும் அவர் பத்தினியையும் பின்
தொடர்ந்து வந்திருக்கின்றார். வழியில் இந்தப் பெண்ணி
னுடைய பிதாவையும் சகோதரனையுங் கண்டு அவர்களையும்
தம்முடன் அழைத்துவந்திருக்கிறார், மஹாராஜ்.

நயன்—எக்காலத்தும் நேர்மை தவறாத நிருபர் எங்களைக் காட்
டிக்கொடுத்து மோசம் செய்து விட்டார்!

ரேடபு—உமது பிதாவுடன் அவரும் வந்திருக்கிறபடியால் அவர்
குற்றத்தை நேரிலே நீர் சொல்லலாகும்.

ச்சான்—நிருபன் வந்திருக்கிறானா?

ரேடபு—நிருபரை நேரில் கண்டு பேசிவருகின்றேன். இடைய
னும் இடையன் மகனும் அவர் வசத்திலிருக்கின்றார்கள். நிரு
பன் காலிலும் கையிலும் விழுந்து கெஞ்சிக்கொண்டிருக்கி
றார்கள். மத்ஸ்ய நாட்டரசரோ அவர்களிருவரையும் சித்திர
வதை செய்வதாக அச்சுறுத்திக்கொண்டிருக்கிறார். இடைய
ரிருவரும் வல்லூற்றைக் கண்ட கொக்கைப்போல் மனந்தடு
மாறித் தவித்துக்கொண்டிருக்கின்றார்கள்.

மதீ—என் அருமைத் தந்தையே, பாவியாகிய என்னால் நீர் இப்
பாடுபடுதலாகுமா? [தருமனை நோக்கி] நமது கலியாணத்தி
ற்குக் கடவுளே விக்கினங்கள் தேடுகிறார்போலும்.

ச்சான்—உங்களுக்குக் கலியாணமாயிற்றோ?

நமன்—“விக்னேசுரடு பெண்லிகி வெய்விக்னலு” என்றாற்
போல எங்கள்கலியாணத்திற்கு கிரஹங்களெல்லாம் அசுபஸ்
தானத்திலிருந்து தடைசெய்கின்றன. உயர்ந்தோரும் தாழ்ந்
தோரும் ஒருவகையாகத்தான் நடத்தப்படுகின்றார்.

ச்சான்—தமது பக்கத்திலிருக்கும்பெண் ராஜகுமாரியா?

நமன்—விவாக முடிந்த க்ஷணமே அப்படியாவாள்.

ச்சான்—அந்தக்ஷணந்தான் தாமஸமாயிருக்கும்போல்தோன்று
கிறது. உமதுபிதாவுக்குட்பட்டு நடக்கவேண்டியதுகடமையா

யிருக்க அவரிஷ்டத்திற்கு விரோதமாய் நீர் நடத்தல் எனக்கு வருத்தத்தை யுண்டாக்குகின்றது. அழகிற் சிறந்தவளா யிருத்தல் போலவே குலத்திலும் மேலானவளா யிருப்பின் இந்தப்பெண் உமக்கேற்ற பத்னியாவாளென்பதிற் சந்தேக மில்லை.

நருமன்—[சுமதியை நோக்கி] என் கண்ணே! நீ தலைகுனிந்து நிற்பானேன்: நிமிர்ந்து என்னைப் பார். அதிருஷ்டம் இந்தச் சமயம் என் பிதாவினின்று என்னைப் பிரியச்செய்தாலும் உன்னைவிட்டுப் பிரிதலென்பது என் உயிர் உள்ளவரையில் இல்லையென்று உறுதியாய் வைத்துக்கொள். [மச்சானை நோக்கி] காலத்தின் தன்மை நம்மை எவ்வகையிலும் வாதிப்ப தில்லை.என் பிதாவினிடத்தில் எனக்காகத் தாம் பேசும் பக்ஷத்தில் அவர் எதையுங் கொடேனென்று மறுக்கார்.

மச்சான்—அப்படியாயின் உமது காதலியையே கேட்கின்றேன். அவளைத்தான் அவர் பொருட்டாக நினைக்கவில்லையே.

புனிதை—இந்தச் சிறுமியைக் கண்கொட்டாமற் பார்க்கின்றீரே! உமது பட்டமஹிஷி இறந்ததற்கு ஒருமாதம் முன்னமே, இச்சிறுமியினும் ரூபத்திலுயர்ந்தவளாயன்றோ இருந்தனள்.

மச்சான்—இந்தச் சமயம் அவள் ஞாபகம் எனக்கு வந்தபடியாற் றான் இச்சிறுமியையும் நான் உற்றுப்பார்த்தேன். [தருமனை நோக்கி] உமது மனுவிற்கு உத்தரம் ஒன்றும் சொல்லாமலி ருக்கிறேன். இப்போழ்தே உமது பிதாவினிடத்திற் போகி ன்றேன். உமது காதலினால் உமது மானத்துக்கு இடை யூறு ஒன்றும் வராத வண்ணம் நான் உமது அபிமானத்தை யும் மானத்தையும் காக்கின்றேன். நீர் என்னோடுகூடவாரும். நாம் உமது பிதா இருக்கும் இடத்திற்குப் போவோம்.

## ஐந்தாமங்கம்.

### இரண்டாங்களம்.

### மச்சரன் அரண்மனைக் கெதிரில்.

(பிரவேசம்—சுயம்புவும் ஒரு பிரபுவும்.)

**சுயம்பு**—இடையனும் இடையன் மகனும் அரசனிடத்தில் நடந்த காரியங்களைச் சொல்லும்பொழுது நீர் அங்கிருந்தீரோ?

**முதல்பிரபு**—மூட்டையை அவிழ்க்கும்போதும் இடையன் அதைத் தான் கண்டெடுத்த இடத்தைச் சொன்னபோதும் நான் உடனிருந்தேன். அங்குள்ளார் சற்றுப் பிரமமடைந்திருந்து, பிறகு எங்களை வெளியிற் போகச்சொன்னார்கள். குழந்தையை மூட்டையின் பக்கத்தில் இடையன் கண்டதாகச்சொன்னது என் காதில் நன்றாய்ப் பட்டது.

**சுயம்பு**—காரியம் எவ்வாறு முடிந்ததென்று கேட்க ஆவலாயிருக்கிறது.

**முதல்பிரபு**—எனக்குத் தெரிந்தமட்டில் சொல்லுகிறேன். அரசனும் நிருபனும் மூக்கின்மேல் கைவைத்து ஆச்சரியப்பட்டார்கள். அரசன் நிருபனைப் பார்க்கிறதும் நிருபன் அரசனைப் பார்க்கிறதாயுமிருந்தார். வாய்திறந்து அவ்விருவரும் பேசாதிருந்தனராயினும் அவர் மனத்திலிருந்தது முகத்தில் விளங்கிற்று. அவர்களுக்குள் மகிழ்ச்சி மிகுந்திருந்ததா, துக்கம் மிகுந்திருந்ததா, என்று சொல்லக் கூடவில்லை. இதோ சுகன் வருகிறார். இவரைக் கேட்போம். இவருக்கு என்னிலும் அதிகமாகத் தெரிந்திருக்கலாம்.

பிரவேசம்—சுகன்

ஹே சுகரே—என்ன சமாசாரம்.

**சுகன்**—கொண்டாட்டந்தான். மச்சர ராஜாவின் குலதெய்வம் சொன்னபடி நிறைவேறி விட்டது. மச்சரன் குமாரி

அகப்பட்டுவிட்டாள். எல்லோரும் ஆச்சரியக்கடலில் மூழ்கியிருக்கிறார்கள். புனிதையின் காரியஸ்தர் இதோ வருகிறார். அவருக்கு விசேஷங்கள் நன்றாய்த் தெரியும்.

பிரவேசம் — புனிதையின் காரியஸ்தன்.

என்னவோ அதிசயங்களுண்டாயிருக்கின்றனவாமே! உமக்கு ஏதாவது தெரியுமா? வாஸ்தவமென்று நம்ப முடியவில்லை. மச்சரன் பெண் அகப்பட்டுவிட்டாளா?

புனி-காரி—அதில் ஸந்தேக லேசமுங் கிடையாது. அத்தாக்ஷிகள் ஆக்ஷேபிக்கக்கூடாதனவாயிருக்கின்றன. தாந்தியின் உடைகள்; தாந்தியின் கண்டசரம் குழந்தையின் கழுத்திலிருந்தது. கலியனுடைய ஸ்வஹஸ்தலிகிதமான கடிதங்கள்; சுமதி தாந்தியின் முகஜாடையுடையவளாயிருத்தல்; சுமதியின் பெருந்தன்மை; அவளுடைய உயர்ந்த ஒழுக்கம்; இவற்றையெல்லாம் கண்ணுற்ற பின்னும் சுமதி மச்சரன் குமாரி - என்று நினைக்காமல் வேறெப்படி எண்ணுகிறது? மச்சரனும் சுசீலனும் ஒருவரை ஒருவர் கண்டு பேசும்போது நீர் அங்கு இருந்தீரோ?

சுகன்—நான் அங்கு இல்லை.

புனி-காரி—இந்தக்காட்சியைக் காணாத கண்கள் வீண்கண்கள். சந்தோஷத்தின்மேற் சந்தோஷம் அடுக்கி வந்தது. ஆனந்தத்தினால் இருவரும் கண்ணீர் உகுத்தார்கள், மச்சரன் தன் மகளைக் கண்ட களிப்பினால், குழந்தாய், ஐயோ, உன் தாய் இந்தச்சமயம் இல்லாமற் போய்விட்டாளே!" என்று கதறி சுசீலனை மன்னிப்புப் பலமுறை கேட்டுக்கொண்டார். பின்பு தன் மருமகப்பிள்ளையைத் தழுவிக்கொண்டார். கிழ இடையனைப் புகழ்ந்தார்.

சுகன்—அரசன் மகளைக் காட்டிற் கொண்டுவிடப்போன கலியன் கதி என்ன ஆயிற்று?

புனி-காரி—அது பழைய கதையாயிற்று. குழந்தையைக் காட்டில் விட்டுத்திரும்புகையில்கலியனை ஒருகரடி அடித்துக்கொன்று தின்றுவிட்டது. அதைப் பார்த்தவன் இடையன் மகன்.

கலியன் போட்டிருந்த மோதிரங்கள், அங்கவஸ்திரங்கள் எல்லாம் இங்கு வந்துள. அவற்றைப் புனிதை பார்த்துத் தன் புருஷனுடையவை என்று ஒத்துக்கொண்டு விட்டபடியால் கலியன் இறந்தானென்பதிற் சந்தேகமில்லை.

முதல் பிரபு—கலியன் ஏறிப்போன கப்பலின் கதி என்ன ?

புனி-காரி—கலியன் மாண்ட நிமிஷமே அவனேறிப்போன மரக்கலமும் கடலில் ஆழ்ந்திற்று. நமது அரசன் எவ்வெக்கருவிகளைக்கொண்டு தன் புத்திரிக்குக் கேடுவகுத்தானோ அவையெல்லா மழிந்தன. புனிதை பர்த்தாவை நினைத்து ஒரு கண்ணால் அழுவாள். தெய்வசங்கல்பம் நிறைவேறி அரசின்குமாரி திரும்பவும் தன் நாட்டிற்கு வந்ததைக்கண்டு ஆனந்தக்கண்ணீர் சொரிவாள். ராஜகுமாரியை இருகரங்களாலும் தூக்கித் தன் மார்போடணைத்துக்கொண்டு அளவிறந்த களிப்புறுவாள். கட்டிக்கொண்ட இளவரசியைக் கீழேவிடப் புனிதைக்கு மனம் வரவில்லை போலும்.

முதல் பிரபு—இந்தக் காட்சி மன்னர்கண்டு மகிழற்பாலது. இதில் பாத்திரங்களா யிருந்தவர்கள் அரசர்களல்லவா ?

புனி-காரி—எல்லார் மனத்தையும் உருக்கின காக்ஷி ஒன்றுண்டு; அதைச் சொல்லுகிறேன். மச்சரன், மனைவியின் மரணத்தையும், அந்த மரணம் அவளுக்கு நேரிட்ட வகையையும், அதற்குத் தான் காரணமாயிருந்ததையும், அவன்பச்சாதாபத்தையும் வெளியிட்டபொழுது அவன் குமாரி கண்கொட்டாமலும் ஒரேமனதாயும் தன் பிதாவின் சொற்களைக் கேட்டுத் துக்கத்தால் சோர்வையடைந்தாள். அவள் கண்ணினின்றும் இரத்தம் ஆறுய்ப் பெருகிற்று. நானும் அந்த ஸமயத்தில் அழுதுவிட்டேன். சுமதியின் முகத்தை அக்காலத்தில் கண்ட கல்லுமுருகும்.

முதல் பிரபு-எல்லோரும் அரண்மனைக்குத்திரும்பிவிட்டார்களா?

புனி-காரி—புனிதை தன் வீட்டில் தாந்தியைப்போல் ஒரு சிலை செய்துவைத்திருப்பதாகச் சொன்னவுடன் சுமதி அதைப் பார்த்துவிட்டுத்தான் வேறுகாரியஞ் செய்வே னென்றுன்.

மற்றவரும் அவளோடு கூடப்புனிதையின் வீட்டிற்குப்போயி ருக்கிறார்கள், அங்குதான் அவர்களுக்குச் சாப்பாடாம்.

சுகன்—புனிதை அந்த வீட்டில் ஏதோ விசேஷமிருப்பதுபோல் அடிக்கடி அங்கு போவதுண்டு. நாமும் அங்கு போகலாம் வாருங்கள்.

முதல் பிரபு—கண்ணுக்கினிய காக்ஷி புனிதையின் இருகத்தி லிருக்கக் குருடர்போல் நாமிங்குழல்வதேன்? போவோம் வாருங்கள்.

[பிரபுக்கள் போய் விடுகிறார்கள்.]

சுயம்பு—என்றால் ருழு மனத்தோடு உபகரிக்கப்படாதவர்களும் சுக்கிரதசையை இப்போழ் தனுபவிக்கிறவர்களுமான கோவி ந்தனும் கண்ணனும் இதோ வருகிறார்கள்.

பிரவேசம்—இடைக்கோவிந்தனும் அவன் மகன் கண்ணனும்.

கோவிந்தன்—டே கண்ணு! எனக்கு இனிமேல் பிள்ளை குட்டி உண்டாகப்போரதில்லே. ஒம் மவனுவளும் மவளுவளும் பெரிய மனிசான் தான்.

கண்ணன்—[சுயம்புவை நோக்கி] எ, ஐயா, என்னை ஈனசாதிப் பயலெண்ணு திட்டி என்னைத் தொடக்கூட மாட்டேனன்னீங் களே. நான் மேலே போட்டிருக்கிற துப்பட்டாவைப் பார் த்தீயா? நான் பெரிய மனிசனோ இல்லேயோ சொல்லேயா?

சுயம்பு—இளைய கோனாரே, உம்மைவிடப் பெரிய மனிதர் உலகி லேயே இல்லே.

கண்ணன்—ஒரு சாம நேரத்துக்குள்ளே எம்மாம் பெரியவனாயிட் டேன் பார்த்தீமா?

கோவிந்தன்—டே கண்ணு, நாமாத்திரம் பெரிய மனிசனல்ல வோ?

கண்ணன்—அப்பா, உனக்கு மின்னேயே நான் பெரியமனிசனாயிட் டேன். குட்டிராசா எங்கையைத் தானே மின்னாலே புடிச்சு 'மச்சான்' இன்னாங்க. ரெண்டு ராசாக்களும் அப்பரந்தானே ஒன்னை " அண்ணே " இன்னாங்க, குட்டிராசாவந்து ஒன்னை மாமா இன்னாங்க; தங்கச்சி ஒங்கிட்ட வந்து நின்னுகிட்டு

அப்பா இன்ன. இவங்கல்லாம் இப்படிச் சொல்லச்சே நமக்கு அழுகை வந்திடிச்சு. கண்ணுலே எம்மாந் தண்ணீர் ஊத்திச்சு.

**கோவிந்தன்**—இன்னம் எம்மாந்தடவை கண்ணீர்விட்டு அழுவ சாமி தலையிலெழுதி யிருக்கிருரோ?

**கண்ணன்**—ஆமாமா, அப்படித்தானிருக்குமினு தோணுது.

**சுயம்பு**—கோனுரே, என்மேல் கொஞ்சம் கிருபைசெய்து இளவரசனிடத்தில் என்னைப்பற்றிச் சிபார்சு செய்யவேண்டும்.

**கோவிந்தன்**—எ கண்ணுப்பயலே, பெரிய மனுசாளாப் போயிட்டேமல்லவா, இனிமே அவங்களாட்டமாத்தானே நடக்கவேணும்.

**கண்ணன்**—ஒங்காலாடித்தனத்தை யெல்லாம்விட்டுட்டா சிபார்சு பண்ணுவேன்.

**சுயம்பு**—உங்கள் சித்தப்படி செய்கிறேன்.

**கண்ணன்**—நீ ரொம்ப யோக்யனிண்ணு மவராசவண்டை சத்தியம் பண்ணிச் சொல்ரேன்.

**கோவிந்தன்**—சும்மா சொன்ன போதும்; சத்தியம்பண்ணுதே, மவனே.

**கண்ணன்**—பெரிய மனிசனானப்பரம் சத்தியம் பண்ணப்படாதா? குப்பைக் காட்டுப்பயலுவ சத்தியம் பண்ணுக்க யாரு நம்புவாங்க?

**கோவிந்தன்**—நீசொல்றது பொய்யாப் போனுக்கா என்னபண்ணுவாய்?

**கண்ணன்**—வேண்டியவங்களுக்காகச் சத்யம் பண்ணத்தான்வேணும் அப்பா, அதான் பெரியமனிசனுக் கடையாளம். சுயம்பு,குட்டி ராசாவிடத்தில் உனக்குக் கைநீளமிண்ணுசொல்றேன்; நீ கள்ளே குடிக்கமாட்டேண்ணுஞ் சொல்ரேன், போருமா?

**சுயம்பு**—சரியாக நடந்துக்கொள்ளுகிறேன், கோனுரே.

**கண்ணன்**—சரியா நடந்தியோ பொழைச்சே: இல்லாகட்டி அம்பிட்டுக்கிட்டு முழிப்பே. ராணியைப்போல ஒரு பொம்மை கல்லாலே பண்ணி வைச்சிருக்காங்களாம். அதைப்பார்க்க ராசாங்க மச்சான், தங்கச்சி எல்லாரும் போயிருக்காக. நாமும் அங்கேயே போவம் வாங்க.

# ஐந்தாமங்கம்.

## மூன்றாங்களம்.

### புனிதையின் பூஜாமண்டபம்.

**பிரவேசம்**—*மச்சான், சுசீலன், தருமன், சுமதி, நிரூபன், புனிதை, மற்றுமுள்ள பரிவார ஜனங்கள்.*

**மச்சான்**—அம்மணி, புனிதா, உன்னாலல்லவோ என் மனம் சாந்தியை அடைந்திருக்கின்றது.

**புனிதை**—மஹாராஜ், நான் தமது அடிமை; என்னிடத்துப் பிழையுண்டாயிருக்குமாயின் அப்பிழை என் மனப்பூர்வமாய்ச் செய்யப்பட்டிராதென்பது உறுதி. தாமும் கிரீடாதிபதியாகிய சுசீலரும் அவர் குமாரரும் தமது குமாரியும் கலியாணக் கோலத்தோடு என்னுடைய அற்பமான வீட்டிற்கு வரும்படி நேர்ந்த பாக்கியத்தை என்னென்று சொல்வேன்? என் உயிரையே தத்தம் பண்ணினாலும் தாம் எனக்குச் செய்திருக்கிற பெருமைக்கு அது கைம்மாறாகாது.

**மச்சான்**—புனிதா, நீ எங்களுக்குச் செய்திருக்கிற மரியாதைகள் அளவிடற்கரியன. உன் மண்டபத்திலுள்ள சித்திரங்களைப் பார்த்துக் கண்களித்தோம். தாந்தியின் சிலை செய்து வைத்திருப்பதாகச் சொல்லினையே. அது எங்குளது? சுமதி தன் தாயின் ரூபத்தைப் பார்க்க மிகுந்த ஆவலுள்ளவளாயிருக்கின்றாளே.

**புனிதை**—தாந்தி ஜீவந்தையாயிருந்த காலத்தில் தனக்குவமையில்லாத பெண்மணியாயிருந்தனள். இங்கு செய்து வைத்திருக்கும் சிலை அவள் உருவானபடியால் அதைத் தனியிடத்தே வைத்துளேன். இதோ பாருங்கள், தாந்தியின் உருவந் தோன்றும்.

[புனிதை அங்கு போட்டிருந்த திரையை எடுத்துப்போட்டு, அங்குள்ள சிலைபோன்ற உருவத்தை எல்லோரும் பார்க்கச்செய்தனள்.]

என் வாய்திறவாமல் மௌனமாயிருக்கிறீர்கள்? ஆச்சரியம்

உங்கள் நாவை விலங்கிட்டதோ? மஹராஜ், தமது மனத்தில் தோன்றுகின்றவற்றைச் சொல்லத் தடையென்ன ?

**மச்சரன்**—நிற்கும் சிலை தாந்தியினுடையதுபோலத்தா னிருக்கின்றது. ரூபமே, நீ என்னைக் கண்டிக்க நினைக்கின்றாயல்லவா? உன்னை தாந்தி என்பேன் ; என் அருங்காதலி என்பேன்; உத்தம பத்னி என்பேன் ; உனக்கு எந்தப் புகழ்தான் தகாது ? உருவமே, நீ என்னை நிந்தித்துப் பேசாமலிருத்தலுக்குங் காரணமுண்டு.

வேற்றுமை யின்றிக் கலந்திருவர் நட்டக்காற்
றேற்றா வொழுக்க மொருவன்கண் ணுண்டாயி
னாற்றுந் துணையும் பொறுக்க பொறானேயிற்
றூற்றாதே தூர விடல்—என்னும் நீதி உன்னிடத்திற் பிறந்த தன்றோ ? புனிதா, தாந்தி உயிரோடிருந்த காலத்தில் அவள்முகம் சிலையிலிருப்பதுபோலத் திரையுள்ளதாக இல்லையே! வயதிலும் முதிர்ந்தவ ளன்றோ.

**சுசீலன்**—அவ்வளவு முதிர்ந்ததாகத் தோற்றவில்லையே.

**புனிதை**—அது சிற்பியின் கைத்திறமன்றோ ? பதினாறு வருஷங்களிலுண்டாயிருக்கும் மாறுதல்களைச் சிற்பி காட்டி யிருக்கின்றாரல்லவா ?

**மச்சரன்**—ஆம், ஆம், நீ சொல்வது வாஸ்தவமே ; சிலையைப் பார்க்கப் பார்க்க என் மனம் நோகின்றதே. தெய்வமே, உயிருடனிருந்த காலத்திலும் இப்படித்தான் தாந்தி கம்பீரமாய் நின்றாள். அவளிடத்தில் என் காதலைச் சொன்ன காலம் என் நினைப்பில் வருகின்றது. வாய்திறந்து பேச எனக்கு வெட்கமாயிருக்கின்றது. இந்தக் கல்லும் என்னைக் கடிந்து பேசுகின்றதே. உத்தம விக்கிரஹமே ! சிற்பத்தின் மாண்பே எல்லாரையும் வசியம் பண்ணுகின்றது. நான் செய்த கொடுமைகளை எனக்கு நினைப்பூட்டுகின்றாய். கல்லாய்ச் சமைந்தும் உன் அருங் குமாரியின் பொருட்டு உயிருள்ளவள் போல் தோன்றுகின்றாயோ ?

**சுமதி**—[புனிதையை நோக்கி] என் மூடபக்தியைப் பரிகாசஞ் செய்யலாகாது. இந்தச் சிலைக்கு நமஸ்காரஞ்செய்து அதன்

அனுக்கிரகத்தைப்பெற விரும்புகின்றேன். [சிலையைநோக்கி] ஹே, பட்ட மஹிஷி, பாவியாகிய நான் பிறந்தவுடன் நீ உயிரைத்துறந்தாயே, உன் கையைத்தொட்டு முத்தமிடுவேன் [சிலையண்டை போகின்றாள்.]

**புனிதை**—அம்மணி, அம்மணி, சற்றுப் பொறுத்தல் வேண்டும். இப்போதுதான் சிலை பீடத்தில் வைக்கப்பெற்றது. வர்ணம் இன்னுங் காயவில்லை.

**நிருபன்**—மஹாராஜ், பதினாறு வருஷம் தமது துக்கம் ஜீவித்திருந்தது. சுகமும் துக்கமும் அற்பாயுளுள்ளவை. ஆயினும் உமது துக்கம் தீர்க்காயுள் படைத்தது.

**சுசீலன்**—[மச்சரனை நோக்கி] சகோதரரே, இந்தச் சிலையைச் செய்து உம்முடைய மனத்தைக் களிக்கச்செய்தவர் உமது கவலையையும் தீர்ப்பாராக.

**புனிதை**—மஹாராஜ், இந்தக் கல் தமது மனத்தை இத்துணை வருத்தஞ்செய்யு மென்றறிந்திருந்தேனாயின், இதைக் காட்டியே இருக்கமாட்டேன். [திரைபோட எத்தனிக்க.]

**மச்சரான்**—திரையை இழுக்கவேண்டாம்.

**புனிதை**—அதன்மேலேயே கண்ணா யிருப்பீராயின், உமது புத்திக்கு அது நகருவதுபோல்வுந் தோற்றும்.

**மச்சரான்**—இருக்கட்டும்; அப்படியே இருக்கட்டும். இது என்ன புதுமை! இச்சிலையை நிருமித்தவன் நரனோ, பிரமனோ? சுசீலா, இப்பதுமை மூச்சுவிடுவது போலவும் நரம்புகளில் இரத்த ஓட்டமுடையதுபோலவுந் தோற்றவில்லையா?

**சுசீலன்**—கண்ணிழந்தவன்றான் சிலையைக் கல்லென்பான். சிற்பியின் சாமர்த்தியத்தை என்னென்று சொல்வேன்! உயிரோடிருக்கிறதுபோலக் காண்கின்றதே.

**மச்சரான்**—கண்கள் இமைக்கின்றனவே! கிருத்திருமப்பொருள் நம்மை வெட்கமடையச் செய்கின்றதே.

**புனிதை**—திரையைப் போடாமல் வைத்தேனாயின் எனது அரசன் சிலையை ஜீவஜந்து என்றெண்ணுவார்.

**மச்சரன்**—புனிதா, என்கண்மணியே! இருபது வருஷமானாலும் சிலையையே பார்த்துக்கொண்டு நிற்பேன். மற்றப் புலன்கள் எனக்கு இன்பம் பயக்காவாம். திரையைப் போடவேண்டாம்.

**புனிதை**—தமது சித்தத்தை இம்மட்டுக் கலக்கமடைய என் செய்தேன்! இன்னும் சில அதிசயங்கள் இந்தச் சிலையிலுண்டு. அவற்றை உமக்குக் காண்பித்து உமது புத்தியைக் கலக்கிவிடுகின்றேன்.

**மச்சரன்**—அம்மா புனிதா, நீ சைப்பென்று சொல்வதெல்லாம் எனக்கினியனவாயிருக்கின்றன. இன்னுஞ் சிலையினிடத்திலுள்ள விசேஷங்களைச் சொல்வாய். சிற்பியின் உளி உயிரைத் தருமோ? சிலை உச்சுவாஸ நிச்சுவாஸ முடையதாயன்றோ காணுகின்றது. நான் சிலையை முத்தமிடுகிறேன்.

**புனிதை**—மறைாது, மறைாது. சிலையின் அதரங்களில் இப்போதுதான் சிவப்பு வர்ணம் தடவப்பட்டது. முத்தமிடுவீராயின் வர்ணமும் போய் உமது உதடும் கறைப்படும். தாம் முத்தமிடலாகாது. திரையை இழுத்துப்போடுகிறேன்.

**மச்சரன்**—இன்னும் இருபதுவருஷத்திற்குத் திரைபோடலாகாது.

**சுசீலன்**—நானும் அவ்வளவுகாலம் சிலையையேபார்த்துக்கொண்டு நிற்பேன்.

**புனிதை**—மூன்று விஷயங்களைத் தமக்கு விஞ்ஞாபனம் செய்துகொள்ளுகிறேன். (ஒன்று) சிலையண்டையிலேயே தாம் போதலாகாது; (இரண்டு) இந்த மண்டபத்தினின்று எல்லோரும் வெளியே போய்விடுதல்வேண்டும். (மூன்று) அன்றேல் மேல் நடக்கப்போகும் புதுமைகளைக் கண்டஞ்சுதல் கூடாது. சிலை சலித்து, பீடத்தினின்றிறங்கி உமது கையைப் பற்றும். தாம் இவற்றைக் காணின் நான் ஏதோ மந்திரஞ் செய்துவிட்டேனென்று சொல்லலாம்.

**மச்சரன்**—சிலையை நீ எது செய்யச்சொன்னாலும் எனக்குச் சம்மதம். பேசச்சொன்னால் கேட்கின்றேன். நகரச்சொன்னால்

பார்க்கின்றேன். நகரச் செய்வது எந்துணை சுளுவோ அப்படித்தான் அதைப் பேசச்சொல்வதும்.

புனிதை—மறைந்துகிடக்கும் உங்கள் விசுவாசத்தைக் கிளப்புங்கள். அசையாமல் எல்லோரும் நிற்றல்வேண்டும். நான் இனிச் செய்யப் பிரவேசிக்கும் காரியம் பிழையுள்ளதென்றெண்ணுவோர்கள் இந்த மண்டபத்தைவிட்டு வெளியிற் போதல் வேண்டும்.

மச்சான்—நீ இஷ்டமானதைச் செய். இங்குள்ளவர் ஒருவராவது அடியெடுத்து வைத்தலாகாது.

புனிதை—வாத்தியங்கள் கோஷிக்கட்டும் [அஷ்டாதச வாத்தியங்களுங் கோஷிக்கின்றன.] காலம் வந்துவிட்டது; பீடத்தினின்றுங் கீழே இறங்கக்கடவாய்; இனிக்கல்லாயிருத்தலாகாது; சமீபமாய் வா; காண்போரை வியப்புறும்படிச் செய், வா, வா, பதிவிரதா சிரோமணியாகிய தாந்தி; மரணித்தில் பிரேதத்துவத்தைக் கொடுத்து ஜீவனைப் பெற்றுவா. [சபையோரை நோக்கி] சிலை அசைகின்றது பார்த்தீர்களா? [தாந்தி பீடத்தினின்றும் கீழே இறங்கி வருகின்றாள்.] என் நடுங்குகிறீர்கள்? தாந்தி கேடொன்றையுஞ் செய்யாள். நான் சொன்ன மந்திரங்களில் விபரீதமொன்றுமில்லை யென்று யாவருமறிவீர். இன்னொருமுறை தாந்தி இறக்கிறவரையில் அவளைக் கண்டு விலகாதீர். மஹாராஜ், தமது ஹஸ்தத்தை நீட்டும். தாந்தி சிறுமியாயிருந்தகாலத்தில் நீர் பாணிக்கிரகணஞ்செய்தது நினைப்பிருக்குமே. வயதாய் விட்டபடியால் தாந்தியே உம்மை இப்போது வரிக்கின்றாள்.

மச்சான்—[தாந்தியைக் கட்டித் தழுவி] தாந்தியின் உடல் உயிரோடிருக்குங்காலத்தில் உஷ்ணமாயிருந்தது போலவே இப்போதுமிருக்கிறது. புனிதையின் மந்திரங்கள் எவ்வளவாயினும் நாம் உட்கொள்ளக் கூடியவை.

சுசீலன்—தாந்தியும் மச்சானைத் தழுவுகின்றாள்.

நிருபன்—கழுத்தையல்லவோ கட்டிக்கொண்டிருக்கிறாள். உயிருள்ளவளாயின் வாய்திறந்து பேசட்டும்.

**சுசீலர்**—இத்துணை காலம் தானிருந்த இடத்தையும் யானிடத்திலிருந்து தப்பிவந்த வகையையும் யாவருமறியச் சொல்லட்டும்.

**புனிதை**—சாந்தி உயிரோடிருக்கின்றாள் என்பேனாயின், எல்லோருங் கைகொட்டிக் கேலி பண்ணுவார்கள். ஐயந்தீரவாவிடினும் உயிருள்ளவள் போற்றான் காண்கின்றாள். சற்றுப்பொறுங்கள். [சுமதியை நோக்கி] அம்மணி, நீ உன் தாயின் பாதத்திற்கு நமஸ்காரஞ் செய்து எழுந்திருந்து உன்னை ஆசீர்வதிக்கும்படி கேட்டுக்கொள்வாயாக. [சிலையை நோக்கி] கஷ்டமாய்ப் போன உனது குமாரி அகப்பட்டுவிட்டாள். அவளைக் கடாக்ஷிக்கவேண்டும்.

[சுமதி சாந்தியின் கால்களில் விழுந்து நமஸ்கரிக்கின்றாள்.]

**சாந்தி**—தேவர்களே, உமது உத்தமமான வரங்களை என் குழந்தைக்குத் தருவீராக. அம்மா குழந்தாய்! நீ எங்கு யாரால் வளர்க்கப்பெற்றனை? உன் பிதாவின் கிருகத்திற்கு எப்படித் திரும்பிவந்தனை? என தருமைத்தோழி புனிதை நமது குல தெய்வத்தின் வாக்கை எனக்குச் சொன்னது முதல் முடிவு எவ்வாறாகுமென்று பார்ப்பதற்கே பிராணனை இத்துணை காலம் வைத்திருந்தேன் அம்மா!

**புனிதை**—அந்தக்கதை யொன்றும் இத்தருணம் வேண்டாம். உமது சரித்திரத்தையும் சொல்லச் சொல்வார்கள். பாக்கியசாலிகளாகிய நீங்களனைவரும் நீடூழிகாலம் சுகித்திருக்கக் கடவுள் கருணை புரிவாராக.

என்னைப்பற்றின மட்டிலோ, நான் ஒரு கிழப்புறா: இணைபிரிந்தவள்: பட்டமரமொன்றில் படுத்துறங்கிப் புலம்பப்போகின்றேன். என்கணவனை நான் இனிக் காண்பதேது?

**மச்சரர்**—புனிதா, நீ இவ்வாறு வருந்தலாகாது. நீ எனக்கு ஒரு மனைவி அளித்தது போலவே நானுனக்கு ஒரு கணவனைத் தருகின்றேன். எனது நண்பன் சிரூபனை நீ மணம்புரிதல் வேண்டும். சிரூபா, உன் பாக்கியமே பாக்கியம். புனிதை உனக்கு உயிர்த்தோழியாயமைய நீ என்ன தவஞ்செய்தாயோ? எங்கள்சன்னிதியிலேயே உங்களுக்குமுதலில் பாணிக்

கிரகணம் ஆதல் வேண்டும். சுசீலா, என் அற்பத் தனத்தினால் உன்னிடத்திலும் என் உத்தம பத்னி சாந்தியிடத்திலும் காரணமின்றி ஐயமுற்றுப் பல தீச்செயல்களைச் செய்து படாத பாடுகளைப் பட்டேன். என்னை இனியும் வருத்தாமலிருக்க வேண்டிக்கொள்ளுகிறேன். சாந்தி, இதோ நிற்பவர் உன் மாப்பிள்ளையாகிய தருமன். சுமதி தருமனைச்சுயம்வரத்திற் பெற்றுவிட்டாள். தருமன் சுசீலனுடைய ஏகபுத்திரன். புனிதா, உன் மாளிகையினின்று என் அரண்மனைக்கு எல்லோரும்போவோம். அங்குபோனபின் முதலில் நமக்குள் பிரிவு வந்தது முதல் இது வரையில் நடந்தவற்றை ஒருவருக்கொருவர் சொல்லிக்கொண்டு களிப்போம்: வாருங்கள். எல்லோருக்கும் மங்களமுண்டாகுக.

இராகம்—கல்யாணி—அடதாளம்.

பல்லவி.

இது நல்ல தருணம்— அருள்செய்ய
இது நல்ல தருணம்.

அநுபல்லவி.

பொது நல்ல நட்பல்ல புண்ணியரே கேளும்
பொய்யேதுஞ் சொல்கிலேன் மெய்யே புகல்கின்றேன். (இ)

சரணங்கள்.

கோபமுந்தாபமுங் குடிகெட்டுப் போயிற்று
கொடியவோராங்காரம் பொடிபொடி யாயிற்று
தாபமுஞ் சோபமுந் தான்றனே சென்றது
தத்துவமெல்லா மென்வசம் நின்றது. (இது)

கரையாவெனது மனக்கல்லுங் கரைந்தது
கல்ந்துகொளற் கென்கருத்தும் விரைந்தது
புரையாநிலையிலென் புத்தியுந் தங்கிற்று
பொய்ப்படாக் காதல் தும்பிமேற் பொங்கிற்று. (இது)

ஓம்.

Printed at the Sri Krishna Vilasa Press, Kumbakonam.